*Tenral*

*Malar 4, ital 10*

*September 07, 1957*

Record no. 947

மலர் 4 :: 7-9-57—சனி :: இதழ் 10

# தென்றல்

ஆசிரியர்: கண்ணதாசன்



## அமுதும் பழமும் அன்னை நாடு

ஆரண்யம் புகுவதற்கு இராமன் ஆயத்தமானபோது அயோத்தி அழுததாம்! பூனை அவதாரம் எடுத்து புகைக் கூண்டில் ஒளிந்திருந்து பார்த்ததைப் போல் கம்பர் வர்ணிக்கிருர். இராமன் கடவுள்! அயோத்தி அழுதிருக்கலாம்! கடவுளிடம் அந்த ஆற்றல் கூடவா இல்லாது போயிருக்கும்! ஆனுல் கடந்த வெள்ளி-சனிக்கிழமைகளில் தமிழகம் தன்னுடைய மக்களில் ஒருவனை இடுகாட்டுக்கு அனுப்பிவைத்து கண்ணீர் வடித்து ஓலமிட்டது. இப்போது கம்பனில்லை — அயோத்தியின் அழுகுரலையும், அன்னைத் தமிழகத்தின் அழுகுரலையும் ஒப்பிட்டுக் காட்டுவதற்கு.

கலைவாணர் அவர்கள் நோய் வாய்ப்பட்டு மருத்துவ மனையில் படுக்கையில் கிடக்கும்போது, நேரில் சென்று பார்க்காதவர்கள் இல்லை. அநேகமாக எல்லோரும் போய்ப் பார்த்தார்கள். ஆனுல் யாருமே கலைவாணருக்கு இந்த முடிவு வந்து விடும் என்று எதிர் பார்க்கவில்லை. ஆனுல் கலைவாணருக்கு மட்டும் தன் நிலை தெரிந்திருந்தது. உற்ற நண்பர்களிடமெல்லாம், 'இந்த முறை நான் பிழைக்க மாட்டேன்' என்று சொல்லிவிட்டார். இரவு பகல் எந்த நேரமும் மருத்துவ மனையில் கூட்டமாகவே இருந்தது. சரித்திரப் படங்களில், பொதுமக்களின் கும்பலைப் பார்த்து மகாராஜாக்கள் சாளரத்திலிருந்து பேசுவதைப் போல், மருத்துவ மனைக்கு முன்னே திரண்டிருந்த பொதுமக்களுக்கு மருத்துவர்கள், மனையின் மேல் தளத்திலிருந்தே கலைவாணரின் உடல் நிலையைத் தெரிவித்தார்கள்.

வியாழன் மாலை கலைவாணருக்கு உடல் நிலை மோசம் என்று செய்தி வந்தது. அறிஞர் அண்ணு அவர்கள் மருத்துவ மனைக்கு விரைந்தார்கள். மதுரம் அம்மையாரின் கண்கள் அருவியாயின. ஆறுதல் கூற முடியுமா! கலைவாணர் எல்லோருக்கும் உரித்தானவராயிற்றே! கவலையை விட்டுத் தூர நிற்பவர்கள்தானே கவலைப்படுவோருக்கு ஆறுதல் கூறமுடியும்! அண்ணு எல்லோருக்குமேல் வருந்தியவராயிற்றே! மவுனமாகத் திரும்பி டாக்டர்களைக் கண்டார். 'இன்று இரவு பத்து மணி தாண்டிவிட்டால், இன்னும் இரண்டு நாட்களுக்குப் பயமில்லை' என்று டாக்டர்கள் கூறினுர்கள். அண்ணு அவர்கள் மறுநாள் காலை பத்து மணிவரை பார்த்துவிட்டு மாயவரம் புறப்பட்டார்கள்.

ஆனுல், வெள்ளி காலை 11-10-க்கு கலைவாணர் தமிழகத்தை விட்டுப் பிரிந்தார்கள் என்ற செய்தி காட்டுத் தீ போல் பரவியது. முதன்முதலாக கழகத்தின் தலைமை நிலையத்திற்கு தகவல் கொடுக்கப்பட்டது. அறிவகத்தில் பறந்துகொண்டிருந்த கழகக் கொடி இறங்கியது; எல்லாக் கிளைக் கழகங்களுக்கும் தலைமை நிலையம் மூலம் தகவல் தெரிவிக்கப்பட்டது. அதன்படி எல்லாக் கிளைக் கழகங்களிலும் நமது பத்திரிகை அலுவலகங்களிலும் கொடிகள் இறக்கப்பட்டன.

நமது பொதுச் செயலாளர் நெடுஞ்செழியன் அவர்களும், புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர். அவர்களும் மாயவரம் சென்றிருந்த நமது அண்ணு அவர்களுக்குத் தந்தி கொடுத்தார்கள். இரண்டாம் உலகப்போரின்போது எதிரிகள் ஒத்திகைக்காக சென்னையில் குண்டுப்போட்டுப் பார்த்தபோது சென்னை எவ்வளவு பரபரப்புக் கொண்டிருந்ததோ அந்த அளவு பரபரப்பை— கொந்தளிப்பை கலைவாணர் இறந்த அன்று சென்னை பெற்றிருந்தது.

கலைவாணரின் உயிர் பிரிந்த உடனேயே அவரது பிரேதம் தியாகராயநகரிலுள்ள அவருடைய இல்லத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டது. சென்னையின் உயர்ந்த சுவர்களிலெல்லாம் 'கலைவாணர் மறைந்தார்' என்று எழுதப்பட்டது. யார்யாரோ எழுதினுர்கள்! ஆம்; சென்னை முழுதும், அன்று கலைவாணரிடம் சொந்தம் பாராட்டி நடந்து கொண்டது.

பிற்பகல் மூன்று மணிக்கு மேல் கலைவாணரின் பிரேதம் பார்வைக்கு வைக்கப்பட்டது. சென்னை நகரத்தின் எல்லாத் திக்குகளிலிருந்தும் பொது மக்கள் திரள் திரளாக-சாரை சாரையாக-வடம் வடமாக தியாகராய நகர் நோக்கி விரைந்தார்கள். வெள்ளி இரவு முழுதும் இப்படியே இருந்தது. ஆம், சென்னை தியாகராய நகரில் இருந்தது. இது மிகைப்படுத்திக் கூறியதல்ல.

கலைவாணரின் மறைவு, தமிழகத்தின் பாசத்தை மட்டுமல்ல, தமிழ் நாட்டுக் கலையுலகத்தின் ஒற்றுமையை விளக்கிக் காட்டியது. தமிழ் நடிக, நடிகைகள் யாரும் மிச்சமில்லை! அத்தனை பேரும் வந்திருந்தார்கள். நமது புரட்சி நடிகர் அவர்கள் தீயில் மிதித்தவரைப் போல் துடித்தார். அவருடைய மோட்டார்கள் காற்ருய்ப் பறந்தன. பெரும்பாலான தமிழ் நடிகர்களின் கார்கள் அன்று ஓடி ஓடி அலுத்துப்போயின.

அறிஞர் அண்ணு அவர்கள் மாயவரம் போய்ச் சேருமுன் தந்தி போய்விட்டது. மாயவரத்திலே ஒருதிருமணம். அவர்கள் அண்ணுவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனுல் அவர்கள் எதிர்பார்த்த அண்ணு அவர்களை முந்திக்கொண்டு, அந்த வீட்டு முகவரிக்கு கலைவாணரின் மரணச்செய்தி போய்ச் சேர்ந்தது. அண்ணு அவர்கள் மாயவரம் போய் அந்த வீட்டுவாசலில் காரை நிறுத்தியதும், மணமகன் ஓடிவந்து தந்தியைக் கொடுத்தார். அண்ணு அவர்கள் மலைத்துவிட்டார்களாம்! காரைவிட்டு இறங்கக் கூட இல்லை. திரும்பிய மோட்டார் தியாகராயநகர் வந்துதான் நின்றது. நங்கவரம் போராட்டத்திலிருந்து கலைஞர் கருணுநிதி அவர்களும் செய்திகேட்டு சென்னைக்கு விரைந்து வந்து சேர்ந்தார்.

சனி காலை எட்டு மணி அளவில், நடிகவேள் எம். ஆர். ராதா அவர்களின் அலங்கரிக்கப்பட்ட காரில் கலைவாணரின் சவம் படுத்த கோலத்தில் மவுண்ட் ரோடு வழியாக ஊர்வலமாக கொண்டுவரப்பட்டது. ஊர்வலத்தில் கலந்துகொண்ட கூட்டத்தை ஒவ்வொரு பத்திரிகையும் ஒவ்வொரு விதமாகக் கணக்கிட்டுச் சொல்கின்றன. ஆனுல் எல்லாருமே லட்சக் கணக்கில்தான் சொல்கிருர்கள். அந்த வகையில் தமிழ்நாட்டுத் தேசிய பத்திரிகைகள்கூட ஒற்றுமையாக உண்மையை எழுதியது பாராட்டத் தக்கதுதான்.

பிரேத ஊர்வலத்தில் கலந்து கொண்ட கூட்டத்தைப் பற்றி வயதானவரொருவர் தன் கருத்தைத் தெரிவித்தார். புல்கானின் வந்தபோது கூடிய கூட்டத்தைப்போல் நான்கு மடங்கு என்ருர். காந்தியார் வந்தபோதுகூட இவ்வளவு கூட்டம் கூடியது என்று சொல்வதற்கில்லை என்று துணிந்து சொன்னுர் அவர்.

மதுரையில் 'அழகர்' ஆற்றிலே இறங்கும்போது இப்படிப் பட்ட ஜன நெறிசலைப் பார்த்திருக்கிறேன் — என்ருர் இன்னெருவர். அவர் பாண்டி நாட்டைச் சேர்ந்தவர். இது முற்றிலும் உண்மை. 'அழகர்' ஆற்றிலே இறங்கும் கோலமும், கலைவாணர் பிரேத ஊர்வலம் வந்த காட்சியும் ஒரேமாதிரிதான்! அவ்வளவு கூட்டம்! அவ்வளவு உயரத்தில் கலைவாணர் பிரேதம் படுக்கவைக்கப் பட்டிருந்தது.

கலைவாணரின் மரணச் சேதியே அனைவரையும் அழ

— 11-ம் பக்கம் —

## உலக உண்மை!



"நாகர்கோயில் டென்னிஸ் கிளப்பில் ரஷ்யா போய் வந்ததற்காக எனக்குப் பிரமாதமான வரவேற்பளித்தார்கள். அந்தக் கிளப்பில் செல்வ வீட்டுப் பிள்ளைகள், அனைவரும் அங்கத்தினர்கள். அந்தக் கூட்டத்தில் என்னை அனைவரும் அந்த கிளப்பின் நிரந்தரத் தலைவராக இருக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். எனக்குச் சிரிப்புப் பொறுக்க முடியவில்லை. ஏனென்ருல் அதே டென்னிஸ் கிளப்பில், நான் சிறுவனுக இருக்கும்போது பந்து பொறுக்கிப் போட்டு மாதம் மூன்று ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தேன். இன்று அதே கிளப்பிற்கு என்னை நிறந்தரத் தலைவராக்க மேண்டுமென்று கேட்டால் எனக்குப் பெருமைதானே! இப்பொழுதுள்ள பிள்ளைகளுக்கு என்னுடைய பழைய கதை தெரியாது. ஆனுல் எனக்குச் சம்பளம் கொடுத்த மானேஜர் இன்றும் அங்கு மானேஜராகவே இருக்கிருர். பரம்பரையாக பணக்காரனுக இருந்துதான் ஒருவன் முன்னுக்கு வரமுடியும், அறிவாளியாக முடியும் என்பது தப்பு. முயற்சி மெய்வருந்தக் கூலிதரும் என்பது ஒருக் காலும் பொய்யல்ல; அதுதான் உலக உண்மை"

—என். எஸ். கே.



"போற்றுபவர் போற்றட்டும்; புழுதி வாரித்
தூற்றுபவர் தூற்றட்டும்; தொடர்ந்து செல்வேன்
ஏற்றதொரு கருத்தை என(து) உள்ளம் என்ருல்
எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன்: அஞ்சேன்!"


# எண்ணம்

இரு கண்ணதாசன் ஏடு

மலர் 4 | 7—9—57 | இதழ் 10




## மாபெரும் கலைஞன் மறைவினுக் கிரங்கல்

# அடங்காத் துயரம்

— முடியரசன் —

வல்லீட்டி பாய்ந்ததுவே என் நெஞ்சில்!
மாணவர்காள்! எவ்வண்ணம் வாய்திறந்து
சொல்கூட்டித் தமிழ்சொல்வேன்! சோர்கின்றேன்!
துடிக்கின்றேன்! துவள்கின்றேன்! என்செய்வேன்!
வில்லோட்டும் கூரம்போ! வாள்நுனியோ!
வெள்வேலோ! நகைமன்னர் மாய்வென்ற
சொல்கேட்டேன் இனிநகையை இலக்கியமாய்ச்
சுவையெட்டின் ஒன்ருய்நாம் காண்போமோ!

கடுந்துன்பம் எத்தனைதான் வந்தாலும்
கலங்கலிலான், சிரிப்பொன்றே அதைநீக்கி
விடுமென்பான், மன்பதைக்கும் அதனைத்தான்
விளக்கினன்காண், கண்புதைத்து நாம் அழவே
படுந்துயரம் இதைமறப்ப தெப்படியோ!
பதைபதைப்புச்(கு) அந்நகைதான் மருந்தாமோ!
நெடுங்கடலே! வான்பரப்பே! சுடுநெருப்பே
நீணிலமே! பெருங்காற்றே அழுதிரோ!

திரையுலகில் மன்னனவன்! தமிழகத்துச்
சீர்திருத்த நல்லுலகில் மன்னனவன்!
குறைகளைய அறிவுரையை நகைச்சுவையில்
குழைத்தெடுத்துக் கொடுக்கின்ற மன்னனவன்!
சிறைஎனினும் அஞ்சலிலான் அங்கிருந்தும்
சிந்திக்கும் சிந்தனையின் மன்னனவன்!
இரைஎனவே கொண்டதுவோ கொடுஞ்சாவு!
இவனை அலால் மற்றொருவர் கிடைத்திலரோ!

சிந்தனையும் புதுமைதருங் கதைபாடக்
கேட்பதினி எந்நாளோ? வானொலிதான்
எந்தவிதம் பொங்கலன்று நின்கருத்துக்
கோவைகளை எடுத்தியம்பும்! நடிகர்க்குப்
பந்தமுடன் அறிவுறுத்தி வழிகாட்டிப்
பாங்குறுத்தத் தலைவரினி யாருளரோ?
சிந்தைஎலாம் தேள்கொட்டிக் கிடக்கின்ற
குடும்பங்கள் செயலற்றுப் போவதுவோ!

நின்வாழ்வின் மதுரந்தான் இப்பிரிவை
நினைந்தாற்ற வல்லாரோ! இக்கொடுமை
பொன்வாழ்விற் புகுந்ததுவே! நினக்கமைந்த
புதுநடையைக் கனிமொழியைப் பெருஞ்சிரிப்பைத்
தம்வாழ்வில் எவ்வண்ணம் மறந்திருப்பார்!
தவிக்கின்ற பல்குடும்பம் என்செய்யும்?
மின்வாழ்வாய் அமைந்ததுவே நின்வாழ்வு!
மேலவனே நாங்களினி என்செய்வோம்!

## வெண்பாப் போட்டி-4.

ஈற்றடி:

கலைவாணர் இல்லாக் கலை.

முடிவு தேதி 21-9-57.

தென்றல் வெண்பாப் போட்டி : : சென்னை-6.

சிறந்தது என்று தேர்ந்தெடுக்கப்படும் வெண்பாவுக்கு ரூ. 10 பரிசளிக்கப்படும்.

# ஊழிக்கு ஒரு கலைஞன்

பன்மொழிப்புலவர் கா. அப்பாதுரையார், எம். ஏ., எல். டி,

நம் சூழலைத் தாமே அமைத்து ஒரு புத்துலகையும் புத்தூழியையும் உண்டுபண்ணிய உயிர்ப்பெருங் கலைஞன், ஊழிக்கலைஞன் கலைவாணர் என். எஸ். கே. அவர்களது மறைவு எளிதில் ஈடுசெய்ய முடியாத ஓர் ஊழிப்பள்ளத்தை உலகில், சிறப்பாகத் தமிழ்க் கலையுலகில் ஏற்படுத்தியுள்ளது.

கால்நூற்றாண்டுக்கு மேலாக நம்மைச் சிரிப்பிலும், சிந்தனையிலும் மிதக்கவைத்த என். எஸ். கே., அவரைப் பற்றிய இடையருக் கவலையால் நம்மைச் சில நாட்கள் ஊசலாடவைத்து, இறுதியில் கண்ணீர்ப் புயலிலே தத்தளிக்க விட்டுச் சென்றுள்ளார். ஆகஸ்டு 30-ந் தேதி அவர் புகழுடம்பெய்தி விட்டார் என்ற கொடுஞ்செய்தி தமிழ்நாடெங்கும் பரந்து மாவட்டங்கள் தோறும் பொதுவாழ்வையே அலைக்கழித்தது. 31-ல் நடைபெற்ற ஊர்வலம், சென்னை என்றும் காணாத ஆறாத் துயர்வெள்ளமாகப் பொங்கி வழிந்தது. சென்னை நகரின் தற்போதைய மக்கள் தொகை பதினைந்து லட்சம் எனக் கூறப்படுகிறது. மிகக் குறைந்த மதிப்பீடு செய்பவர்கள் கூட அன்று முதுகாட்டைச் சுற்றிலும் உள்ள பாதைகளில், இதில் பாதிக்கு மேற்பட்ட மக்கள்—ஏழு எட்டு லட்சம் பேர்கள்—எள் விழ இடமின்றிப் போகவர வாய்ப்பின்றி நெருங்கி நாற்றிசைகளிலும் மோதி அலையாடினர் என்று கூறுகின்றனர். ஆனால் அந்த மாபெருங் கூட்டத்தின் ஒரு பகுதியையே எவரும் பார்த்திருக்க முடியும். அது சென்னை நகர முழுவதும் சுற்றுவட்டாரங்களிலும் சுழன்று அல்லோல கல்லோலப்பட்டது.

கலையின் அன்னை போன்ற அவர் மடியிலிருந்துகொண்டு ஓரிரு தலைமுறையாகத் தமிழராகிய நாம் உலகை அவர் காட்டக்கண்டு பழகிவிட்டோமென்பதை நாம் அன்றுதான் உணர்ந்தோம். முன்னனில் அவர் கருத்துருவாகவே நாம் கண்ட நம் உலகம், அன்று திடுமென நம் காலடியிலிருந்து நழுவிவிட்டது போல நமக்குத் தோன்றிற்று. பறக்கும்போது திடீரென இரு சிறகுகளும் வெட்டப்பட்ட பறவை போல நாம் எல்லையற்ற காலவெளியில் தத்தளிக்கின்றோம்.

அவரை இழந்ததால் கண்ணிழந்தோம், கையிழந்தோம்—அதுமட்டுமன்று; கருத்திழந்து, நாவிழந்து, செயலிழந்து உழல்கிறோம். நம் உள்ளங்கள் சிந்திக்க மறுக்கின்றன. ஆறுதலற்ற இந்த ஆறாத்துயர் நிலையில், இந்த ஆறாத்துயரன்றி நமக்கு ஆறுதல் தருவது வேறில்லை—ஆம், அந்த ஆறாத்துயரிடையேதான் நாம் அவர் ஒப்பற்ற முழு நிறைவை, நமக்கு ஒருவகை காட்டிய அவ்வேர் நூலக அறிவுக் கலைஞனை, மக்கட் பணியாளனை, தொண்டர் நாதனை நாம் உள்ளவாறு மதிப்பிட்டறிகிறோம். நாம் இதுவரை என்றும் ஒரே மொத்தமாக எண்ணிப்பாராத அவர் முழுப்புகழ்ப் பெருநலம், நம் துயர்படிந்த கண்களின் முன் புன்முறுவலொளி பூத்து நகைத்து நிற்கிறது.

“எனக்காகவா அழுகிறீர்கள், தமிழ்ப் பெருமக்களே! எனக்காக அழவேண்டாம். அரை நூற்றாண்டுக்குக் குறைந்த என் வாழ்வில் நான் ஐந்து நூற்றாண்டுகள் வாழ்ந்துவிட்டேன். அத்தகைய மாண்பு எனக்குக் கிடைத்துவிட்டது. இதில் பாதி, பத்திலொரு பங்கு, உங்கள் வாழ்வில் கிடைக்கப் பாருங்கள். வீணாக அழுது நேரம் போக்காதீர்கள். இன்று நான், நாளை நீங்கள்! இடையே அன்றும் இன்றும் என்றுமுள்ள தமிழை, தமிழ்க் கலையை, தமிழினத்தை, தமிழகத்தை வளப்படுத்த ஒவ்வொரு கணமும் செலவிட்டாலும் போதாது. ஆகவே, அழாதேயுங்கள். சிரித்துக்கொண்டு அம்முயற்சியில் விரையுங்கள்” என அவர் புகழுருவம் வானவெளியில் பரவிநின்று நமக்கு அறிவுறுத்துவது போலிருக்கிறது!

ஆம். அவர் வாழ்வின் நிறைவு நம்மைத் திணற வைக்கிறது. ஒரு தனி மனிதன்—ஐம்பது ஆண்டு நிரம்பாத வாழ்வு—அதற்குள் எத்தனை படங்கள், எத்தனை பட வெற்றிகள்—எத்தனை அறச் செயல்கள், எத்தனை புதுப்படைப்புக்கள்—எவ்வளவு மக்கட் சேவை, எவ்வளவு தன்னலமற்ற பொது நல ஆர்வம்! இப்படி வாழக் கொடுத்து வைத்தால், ஒரு தடவை என்ன, ஒன்பது தடவை சாகலாம்!

வாழ்க என். எஸ். கே.! வளர்க அவர் புகழ்! மாள்விலே புது வாழ்வு தூண்டிய மன்னன் வாழ்க! மக்கள் உள்ளத்திலே மாண்பு ஊட்டி, வாழுங்காலத்தில் ஆண்டதுடன் நில்லாது, மாண்ட அன்று அனைவரையும் ஒருங்கு திரட்டி, ‘பார், தமிழகக் கலைஞன் எழுப்பிய தமிழ்த் தேசிய இனம்! தூங்கிக் கிடந்த இனத்தை எழுப்பிவிட்டேன், பார்!’ என்று சுட்டிக்காட்டுகிறது, நம் அழுகை யிடையேகூட அவர் மாளாப் பெரும் புகழ்!

நாஞ்சில் மாவட்டத்தில் நாகர்கோயிலில் மிக எளிய குடும்பத்தில் பிறந்தவர் அவர். மாட மாளிகை வாழ்வுக்கு அன்று, பள்ளிக் கல்விக்கும்கூட வகையற்ற குடி அவர் குடி. ஆனால் அனுபவமென்னும் பள்ளி, கல்லூரிப் படிகளில் ஏறி, பட்டதாரிகள் கண்டு வியக்கும் அறிவுக் கருவூலமாக, தாயினம் சிரிப்பிலே சிந்தனை பெற வழிகண்டு, அவர் அத்தாயினத்துப் பஞ்சை மக்களில் எண்ணற்றவர்களுக்குத் தண்ணளி செய்து தந்தார். வீடற்றோர்க்கு வீடும், உடையற்றோர்க்கு உடையும், உணவற்றோர்க்கு உணவும், கல்வியற்றோர்க்குக் கல்வியும் அளித்து, இறுதியில் நாடற்றோர்க்கு நாடு காணவும் வழை செய்து சென்ற பெரியாராய்த் திகழ்கின்றார் அவர். அவர் கோடி குவிக்கவில்லை. ஆனால் கோடி கட்டிப் பல கோடி வாழவைத்தார். அவருக்காக அழுத பல நூறாயிர மக்களிலேகூட ஒருபெரும் பகுதியினர் நேரடியாக அவரால் வாழ்வு உண்டவரென்றால் அவர் பெருமையை நாவால் நவில, எழுத்தால் எழுத இயலுமோ!

நாடகமேடையில் நடிகராயிருந்து பெரு வெற்றி கண்டவர் அவர். பின் தாமே நாடக மேடை அமைத்து எண்ணற்றவர்களுக்குக் கலை மூலம் வாழ்வு தந்து எண்ணற்றவர்களைக் கலை நடிகராக்கி நாடகத் துறையையும் திரைப்பட உலகையும் வளப்படுத்தினார். தமிழகத்தில் பேசும் படம் பிறந்த நாள் முதல் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக அவர் இல்லாத திரைப்படம் கிடையாது. அவர் பங்கு கொள்ளாமல் சிறப்படைந்த படங்கள் இல்லையென்னலாம். அவர் இல்லாத படம் சிறக்காது என்ற நிலையை உண்டு பண்ணினார். அது மட்டுமோ! அவர் இருந்து சிறப்படைய முடியாத படமும் இருந்ததில்லை. மற்ற எந்த வகையிலும் சிறப்பற்ற மோசமான படங்களைக் கூட, அவர் ஈடுபாடு, வாரக்கணக்கில் ஓடவைக்கப் போதுமானதாயிருந்தது! சென்ற முப்பது ஆண்டு பட விமர்சனங்களைப் புரட்டிப் பார்த்தால், விமர்சகர் யாராயிருந்தாலும், படம் போற்றப் பட்டாலும் தூற்றப்பட்டாலும், என். எஸ். கே.யின் பங்கு யாராலும் போற்றப்படத் தக்கதாகவே நிலவிற்று.

நூற்றுக்கு மேற்பட்ட படங்கள்—ஒன்றுகூடச் சோடையில்லை. கலையுலகில் இத்தகைய சாதனை கண்டவர் தமிழகத்திலன்றி, எந்த நாட்டிலும் அரிதினும் அரியர்.

மனித முயற்சியால் இது எவ்வாறு முடிந்தது என்று எவருக்கும் கேட்கத் தோன்றும் அவ்வளவு செயற்கரிய செயல் இது. அவரது ஒழுங்கச் சிந்தனை, கலைக்கென்றே அவர் தம் வாழ்வின் ஒவ்வொரு நடத்தையையும், ஒவ்வொரு நிகழ்ச்சியையும் ஒப்படைத்த அவர் பணியருமைக்கு இது ஒரு சான்று. நூறு படங்களிலும் மக்கள் ஒருங்கே ஒரே நிலையில் புதுப்புதுச் சுவை கண்டனர். ஆனால் ஒரு படத்தின் நகைத்துணுக்கு மறுபடத்தில் வந்ததில்லை. ஒரு படத்தின் நிகழ்ச்சி மறுபடத்தில் தலைகாட்டியதில்லை. அதே சமயம் அத்தனையிலும் அவர் பாணி, அவர் தனிக் கலை முத்திரை பொறிக்கப்பட்டேயிருந்தது.

அவர் நடிப்புப் பகுதிகள் அத்தனையிலும் அவர் நடிகர் மட்டுமல்ல, அவரே இயக்குநர். அவற்றின் கதை, வசனம், நகைத்துணுக்குகள், பாடல்களில்கூட அவர் கை வண்ணமும் உளவண்ணமும் நன்கு படிந்திருந்தன. அதே சமயம் மற்றும்பல நகைச்சுவை நடிகரின் பகுதிகள், நிகழ்ச்சிகள் போல அவை கதைக்குப் புறம்பாக எங்கும் துண்டுபட்டு நின்றதில்லை. அவர் தனிக் கதை, தனிப்பகுதி தாய்ப்பகுதியுடன் மெய்ப்பகுதியாய் இயல்பாய் இணைந்திருந்தது. அவர் பகுதிக்கு அவர் நடிகர் மட்டுமல்ல, இயங்குநர், ஆக்குநர் என்பதை ஓர்ந்தால், அவர் படைப்புத் திறத்தின் உயர்வும் அகலமும் நன்கு விளங்கும்.

அவரே வகுத்தமைத்த அவருடையதமாக்கிக்கொண்ட தனிப்படங்களில், அவர் தனிச்சிறப்பை முழு உருவில் காணலாம். அவை அழுக்கற்ற பிரசாரப்படங்கள். ஆனால் கட்சிப் பிரசாரமல்ல—கொள்கைப் பிரசாரமல்ல—உள்ளத்தை அள்ளிக்கொள்ளும் சமுக

— 11-ம் பக்கம் —



கவிமணியும், கலைமணியும்.



# ஆறுது! ஆறுது! அழுதாலும் தீராது!

— கண்ணதாசன் —

விந்தியக் கோடும் பொய்யே
விரிகடல் அலையும் பொய்யே!
சந்திரன் எழிலும் பொய்யே!
தாரகை ஒளியும் பொய்யே!
தென்திசைத் தமிழும் பொய்யே!
தென்றலும் பொய்யே! காதல்
மந்திரம் பொழியும் மாதர்
மயக்கமும் பொய்யிற் பொய்யே!

இப்பொழு திருந்தான் அண்ணன்;
இன்றுநான் பார்த்தேன்! காலை
துப்புற வெளுக்கும் போழ்தும்
தூங்கினன்; கண்டேன்! கொஞ்சம்
அப்படி நகர்ந்தேன்; மீண்டும்
அருகினில் வந்தேன்! ஐயோ!
எப்படிச் சொல்வேன்! அண்ணன்
இல்லையே! இல்லை! இல்லை!

கருணையும் மறையு மென்றால்
காலமோர் உண்மை யாமோ?
பொறுமையும் அழியு மாயின்
பூதலம் உறுதி யாமோ?
வருவதை வாரி வாரி
வழங்கிடும் அண்ணன் மேனி
எரிதழல் படுவ காண்பார்
இப்புவி நிலையென் பாரோ!

மாந்திய வயிற்றின் சோகம்
மாற்றவே பொருளென் பானே!
ஈந்தாற் சிவந்த கையை
இனியதா மரைஎன் பானே!
மாந்தருக் குழைப்ப தொன்றே
மகிழ்ச்சியின் தாயென் பானே
மாந்தளிர் நகையை என்றும்
மறக்கிலான் போயி னானே!

இறந்தனன் எனநி னைக்க
இரும்பினால் நெஞ்சம் வேண்டும்!
வருந்துவர் வருத்தம் நீக்க
மறைந்தவன் வரத்தான் வேண்டும்!
அருந்தமிழ் ஆற்றல் கொண்டே
ஆயிரம் துயரம் தீர்ப்பார்,
இறந்தஎன் அண்ணன் தந்த
இத்துயர் தீர்ப்ப ரல்லர்!

நள்ளிராப் போழ்தில் ஓர்நாள்
‘நட’என்றான்; ‘எங்கே’ என்றேன்
கள்ளரும் துயிலும் வேளை,
‘கடற்கரை’க் கென்றான்; சென்றோம்
உள்ளுறும் மணற்பாங் கின்மேல்
ஒய்வுற அமர்ந்தோம்; அண்ணன்
வெள்ளிற மனத்தை ஆங்கே
விரித்தனன்; கதைகள் சொன்னான்.

சிறுவய திருந்து தன்னைச்
சிதைத்ததோர் வறுமை சொன்னான்
வருவது வரட்டும் என்றே
வாழ்ந்ததோர் பொறுமை சொன்னான்!
பெரும்புகழ் பெறுவ தாலே
பெற்றதோர் மகிழ்வும் சொன்னான்!
“இருப்பினும் அமைதி மட்டும்
இல்லையே தம்பி!” என்றான்!

‘மனத்தினைக் குடையும் துன்பம்
மாற்றுவ தெவ்வா’ றென்றான்.
“கனத்தினைத் தூக்கி இந்தக்
கடலிலே வீசும்” என்றேன்
நினைத்ததை முடிக்கும் நெஞ்சன்
நிமிர்ந்தனன்! “தம்பி! உள்ளிற்
கனப்பது மானம்” என்றான்!
கலங்கினேன்! பதிலா சொல்வேன்?

இழையுமத் துயரம் கூறி
“இதுமட்டும் இல்லை யென்றால்
மழையெனப் பொழிவேன்; வாரி
வழங்குவேன்! சப்பா திப்பேன்!
கழையிலும் ஏறி வித்தை
காட்டுவேன்! புதிய எண்ணம்
தழைப்பதை வீசி வீசித்
தமிழையும் காப்பேன்!” என்றான்!

“இதுவரை யாருக் கேனும்
இடர்கள்நான் செய்த தேயில்லை!
சதிபுரிந் தொருவர் செல்வம்
சற்றுமே கொண்ட தேயில்லை!
கதியிலார்க் குதவ வின்றிக்
கைப்பொருள் காத்த தேயில்லை!
மதிவழி வாழ்ந்தேன்! அந்தோ!
மனத்துயர் தவிர்த்த தேயில்லை!



அண்ண(ன்) இவ் வாறு சொன்னான்!
அருவிபோல் கண்ணீர் சிந்தி
மண்ணிடை வடித்தேன்! ஐயோ!
மண்டிய கொடுமைக் காடே!
புண்ணிய நெறியில் லாத
புன்மைசேர் காலக் கூத்தே!
அண்ணனைக் கொன்றாய்! எங்கள்
அமைதியைக் கொன்றாய்! கொன்றாய்!

இறந்தபின் முகத்தைப் பார்த்தேன்!
எழிலிடா எழிலின் தேக்கம்!
பொருந்திய அமைதி யாலே
புன்னகை பொழிந்தான் அண்ணன்!
நெருங்கிய கூட்டம் மோதி
நேயனின் முகத்தைப் பார்த்து
வருந்திய வகையைக் கூற
வார்த்தைதான் தமிழில் இல்லை!

பூனையும் கிளியும் தேம்பிப்
பொருமிய தாகக் கூறும்
பாவயம் படித்தா ரன்றிப்
பார்த்தவர் இலவே இல்லை!
பூனையா? சென்னை மண்ணின்
புல்லெலாம் விம்மி விம்மி
கூனிய துயரம் கண்டோம்!
கூவிய குரலும் கேட்டோம்!

எத்தனை தாய்மார்! ஏழை
எளியவர்! புலவர்! வீரர்!
கத்திடும் கடலும் தோலும்!
காவிரி நீரும் ஓயும்!
“சித்தனே! இனிமேல் இந்தச்
செகத்தையார் காப்பார்!” என்றே
அத்தனை பேரும் சொன்னார்!
அழுகுரல் நகரம் முற்றும்!

வாரிய கைக ளேத்தி
வாயினில் அவித்தோம்! இன்பம்
கூறிய வாயில் கொண்டு
அரிசியைக் குவித்தோம்! அன்பில்
சிரிய கண்கள் மூடிச்
சிதையிடை வைத்தோம்! சாவில்
தேறிய இதயம் தன்னை
தீயடா, தீயில் நீத்தோம்!

தப்பியே பிறந்த நெஞ்சம்
தாய்நெஞ்சம்! பிள்ளை நெஞ்சம்!
செப்பரும் கொடையின் நெஞ்சம்!
தேனிலே தோய்ந்த நெஞ்சம்!
ஒப்பிலா மணியாம் எங்கள்
உயர்கலை வாணர் நெஞ்சம்,
இப்புவி உளநாள் மட்டும்
இனிப்பிறர் காணு நெஞ்சம்!

அருகிலே இருந்த காலம்
அலையென மோதி மோதி
உருகிஎன் மனத்தை வாட்டி
உருக்குலைக் கின்ற தையோ!
கருகிய சடலத் தோடு
கலந்துதான் சென்றி டாமல்
இருப்பதேன்! கடின நெஞ்சம்
என்நெஞ்சம்! பாவி நெஞ்சம்!



# கல்மேல் எழுத்து!

கலைவாணருடன் நெருங்கிப் பழகியவர்கள் அவரை என்றென்றும் மறக்கமுடியாத நிலைமைக்கு ஆளாகிவிடுவார்கள். இந்தக் கட்டுரையாளர் கடந்த ஆறு ஆண்டுகளாகக் கலைவாணரின் உதவியாளராக இருந்தவர். இரவு பகல் கலைவாணருடனேயேஇருந்து, அவரது நகைச்சுவையை வேண்டிய மட்டும் அள்ளிப் பருகும் வாய்ப்படைந்தவர். இவரது கட்டுரை, கலைவாணரின் கலை உள்ளத்தையும் ஈகைக் குணத்தையும், பல துறைகளிலும் அவர் அடைந்திருந்த போராற்றலையும் தெளிவாக விளக்குகிறது. [ஆ-ர்]

"சிந்தனை ஒரு செல்வம். சிந்திக்கத் தெரியாதவன், அதைப் பற்றி எண்ணிப்பார்க்காதவன். பகுத்தறிவு படைத்த மனித குலத்தில் இருக்க அருகதையற்றவன்" என்று சொல்லும் சிந்தனைச்செல்வர் கலைவாணர் இன்று எங்கோ சென்று, நம்மையெல்லாம் சிந்தனையில் ஆழ்த்தியிருக்கிறார்.

சதா சிந்தித்துச் சிந்தித்து அபூர்வமான கற்பனைகளையும், சிந்திக்கத்தூண்டும் அறவுரைகளையும் சொல்லிக்கொண்டிருப்பார். மிகமிகச் சிக்கலான பிரச்னைகளையும் எளிதில் தீர்த்துவைக்கும் மிகச்சிறந்த அறிவாளி அவர்! அவர் வருத்தப்பட்டதெல்லாம், "ஐயோ! வர வர, மக்களுக்கு மனம் சுருங்கிவிட்டதே!" என்றுதான். நாகரிக வளர்ச்சியில் மனம் விரிவடையாமல் சிறிதாகி விட்டது; படிப்பால் பண்பு வளராமல் பாழ்பட்டல்லவா போய்விட்டது என்றெல்லாம் சொல்லி, துடித்துப் போவார்.

அவருடைய சில சிந்தனை அமைப்புகள் உலகம் உள்ளளவும் நிலைத்து நிற்கும் தன்மையுடையன. படப்பிடிப்புக் காலங்களில் அவரிடம் பரபரப்பும் விஷயத்தெளிவும் அசாத்தியமான முறையிலே காணப்படும். நாளை படப்பிடிப்பு இருக்கிறது என்றால், முதல்நாள் இரவிலேயே, காட்சிகள், அதற்குரிய வசனங்கள் ஆகியவற்றைச் சரிவர எழுதி வைத்துக்கொள்வார். ஆனால், மறுநாள் வீட்டிலிருந்து ஸ்டுடியோ போவதற்குள், அதற்குமேல் அபூர்வம் நிறைந்த கருத்துக்களையும விகடத்துணுக்குகளையும் சொல்லி, எழுதியதை அப்படியே வைத்துவிடச்சொல்வார். 'சரி, இதுதான் போலும்' என்று நாம் எண்ணிக் கொண்டேயிருக்க வேண்டியதுதான்! 'செட்டில்' இதையெல்லாம் விட்டு வேறு விதமாக அமையும்! அதுமட்டுமல்ல, முன்பு எழுதியிருந்தவை அனைத்தையும் விட அழகாகவும் ஆணித்தரமாகவும் அந்தக் கருத்துக்கள் அமைந்திருக்கும். இப்படி, கற்பனைத்திறத்துடன், சிந்தனைச்செல்வத்துடன் விளங்கியவர் அவர் ஒருவரே!

பொதுவுடமைத் தத்துவத்தை அவர் நன்குணர்ந்தவர். மனிதனுக்குத் தண்ணீர் எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் பொதுவுடைமை என்பது அவரது கருத்து. தண்ணீரை எப்படி பணம் காசு கொடுக்காமல் அள்ளி உண்ணுகிறோமோ அதே மாதிரியாக உணவும் வழங்க வேண்டும் என்ற மார்க்சீய தத்துவத்தையும் தாண்டிய கொள்கையை உடையவர் கலைவாணர்! இன்றைக்குத் தமிழ் நாட்டில் இவ்வளவு தூரம் பகுத்தறிவு வளர்ச்சியடைவதற்குக் காரணம் அன்றைக்குக் கலைவாணர் இட்ட வித்துத்தான் என்று சொன்னால் அது மிகையாகாது! சமுதாயச் சாக்கடையில் ஊறிப்போன மட்டையைப் போல நாற்றமெடுத்துக்கிடந்த தமிழ் நாடு இன்று பகுத்தறிவைப்பற்றி மார்தட்டிப்பேசுகிறதென்றால் அதற்குக் கலைவாணர் தன் சிந்தனையில் பிறந்த உண்மைகளை, வாழைப்பழத்தில் ஊசிஏற்றுவது போல மக்களின் உள்ளத்திலே தனக்கென வகுத்துக் கொண்ட நகைச்சுவையின் மூலம் பரப்பியதுதான் காரணமென்று துணிந்துகூறலாம். ஒவ்வொரு நகைச்சுவைப் பகுதியிலும் ஒரு படிப்பினை, ஒரு சீர்திருத்தம் காணப்படும்! இவை இல்லாத நகைச் சுவையைக் கலைவாணரிடம் காணவே முடியாது.

சென்ற வருடம் வெளியான வெற்றிப்படமான 'மதுரை வீரனி'ல் கதா நாயகன் காய்ச்சலால் தாக்குண்டு இருக்கிறான். அவன், 'உடல் சுடுகிறது; ஆனால் குளிருகிறது' என்கிறான். அவன் தந்தையின் பாகத்தை ஏற்று நடித்த கலைவாணர் — 'உடல் சுட்டால் உள்ளே குளிர்வதேன்?'—என்ற ஒரு கேள்வியை நாசூக்காகப்போட்டு வைத்திய உலகத்தின் நாடியைப்பிடித்துப் பார்த்துவிட்டார். இப்படி அரிய ஆராய்ச்சிகளைத் தமிழகத்தில் நடிகர் பெருமக்களில் கலைவாணரைத்தவிர வேறு யாரிடம் காண முடியும்?

கலைவாணர் கொடுத்து இன்பங்கண்டவர். வலக்கையால் கொடுப்பது இடக்கைக்குத் தெரியக்கூடாது என்று சொல்வார்கள். கலைவாணர் இரண்டு கைகளாலும் வாரி வழங்கிய வள்ளல்! ஏதாவது அபூர்வமான பொருளை வாங்கி வைத்திருப்பார்! அதை யாராவது ஆசை நோக்குடன் பார்த்துவிட்டால் போதும் அந்தப் பொருள் அவர் வீடு போய்ச்சேர்ந்துவிடும்!

தமிழ் நாட்டில் அவருடைய உதவியைப்பெறாத நிறுவனமே இருக்கமுடியாது என்று சொல்லலாம். அள்ளிக் கொடுப்பதற்கு ஆஸ்தியில்லையே என்ற கவலைதான் அவரைக் கடைசிக் காலத்தில் மிகவும் வாட்டியது.

கணக்கற்ற ஏழைகளுக்கு அவர் கல்யாணங்கள் நடத்தியிருக்கிறார்! தமிழ் நாட்டில் மட்டுமல்ல இந்த நிகழ்ச்சி. சென்ற ஆண்டு காஷ்மீர் போயிருந்தோம். அங்கே 'வெரி நாக்' என்ற ஊரில் சரித்திரமண்டபங்களைப் பாதுகாத்து வரும் ஓர் காஷ்மீரியின் மகளின் திருமணத்திற்கு ஒரு கணிசமான தொகையை நன்கொடையாக அளித்தார்! அந்த மண்டபங்களைப் பார்க்கப்போனபோது ஏற்பட்ட சிறிது நேர பரிச்சயத்தில் அந்தக் காஷ்மீரியின் மீது அவருக்கு பச்சாத்தாபமும் பரிவும் ஏற்பட்டு விட்டது! இப்படித் திக்கெட்டும் அவர் செய்த தர்மங்கள் கணக்கிலடங்கா!

ஏதோ ஒரு தொகையை ஒரு நிறுவனத்திற்குக் கொடுப்பவர்கள் இந்தக்காலத்தில் அதற்கென ஒரு விழாவும் பாராட்டுக் கூட்டமும், பட்டமளிப்பும் நடத்துகிறார்களென்றால் கலைவாணரின் வாழ்நாளில் ஒவ்வொரு நாளும் ஒரு விழாநடந்தவண்ணம் இருந்திருக்க வேண்டும்!

கலைவாணர் ஆரம்பக்கல்விதான் பயின்றார். அன்றைக்கு அவருடைய குடும்பம் இருந்த நிலையில் ஆரம்பக் கல்வியைத் தாண்டிப்போக முடிய வில்லை அவரால்! ஆனால் அவருடைய சிந்தனை சக்தியாலும் பெற்ற





சிரிக்கவைத்து நாட்டைச் செழிக்கவைக்கும் சீர்திருத்தக் கலைஞன்



அனுபவத்தாலும் அவர் ஒரு மேதையாக விளங்கினார். திருக்குறள், கம்பராமாயணம்போன்ற நூல்களில் மிகுந்த ஈடுபாடுடையவர். தமிழ் நாட்டு எழுத்தாளர்களிடம் மிகுந்த அன்பும், மரியாதையும் கொண்டவர். அண்ணா, டி. கே. சி, கல்கி ஆகியோரின் கதைகளை, கட்டுரைகளைப் படித்து ஆனந்திப்பார். படித்தவர்கள், கலைஞர்கள், அறிவாளிகள் இவர்கள் சதா தன்னைச் சுற்றி இருக்க வேண்டுமென்று நினைப்பவர்!

கலைவாணர் ஒரு சிறந்த ரசிகர்' எல்லாத்துறையிலும் ரசிக்கத் தக்க ஆராய்ச்சியும் அனுபவமும் பெற்றவர். இயல், இசை, நாடகம், நாட்டியம், வில்லுப்பாட்டு, சித்திரம், இயற்கைக் காட்சி, காலட்சேபம் இன்னபல துறைகளிலேயும் ரசித்து வசமிழந்து போவார்!

"தண்ணீரைக்கண்டால் மனிதன் குழந்தையாக மாறிவிடுகிறான்" என்று ஒரு எழுத்தாளர் சொல்லியிருக்கிறார். அதற்கு உதாரண புருஷராக விளங்கினார் கலைவாணர். அவர், காவேரியைக்கண்டால் அதில் ஒரு முழுக்குப் போட்டுக் கொள்ளலாம் என்பார்! அதைத்தாண்டி குற்றாலம் போனால் அங்கே ஒரு குளியல்! பக்கத்திலே பாபநாசம் சென்றால் அந்த அருவியில் சிறிது நேரம் நிற்கவேண்டும்! நாகர் கோவிலில் ஒரு ஓடை! அதிலே விழுந்து நீந்தவேண்டும் என்பார்! சென்னையிலிருந்து திருவனந்தபுரம் செல்வதற்குள் குறைந்தது நான்கு இடங்களில் குளித்தாகவேண்டும். ஸ்ரீவில்லிபுத்தூரைத்தாண்டினால் பனம் பதனீர் சாப்பிட வேண்டும்— இப்படிச்சில வழக்கங்கள்!

தமிழ் நாட்டின் மிகச்சிறந்த டைரக்டர்களில் கலைவாணரும் ஒருவர். நடிகர்களுக்கு இப்படித்தான் நடிக்கவேண்டும் என்று நடிப்புச் சொல்லிக்கொடுக்கும் நான்கைந்து டைரக்டர்களில் கலைவாணர் முதன்மையானவர்! 'கிளிசரைனைக்' கண்ணுக்குப் போட்டுக் கொள்ளாமலேயே அழுதுகாட்டுவார். அவர் டைரக்ட் செய்த மணமகள் படம் நல்ல வசூலைத் தந்ததோடு இந்தியாவின் முன் வரிசைப் பட்டியலிலே இடம்பெற்ற டைரக்டர்களில் கலைவாணரும் ஒருவர் என்றபுகழையும் தந்தது. இன்றைக்குப் பெரிய நட்சத்திரங்களாக விளங்கும் நடிகர்கள், கலைவாணரின் தயாரிப்பில் வந்தவர்கள். அதுமட்டுமல்ல, அவர்கள் அந்தக் காலத்தில், கலைவாணரின் ஆதரவு பெற்றவர்களும் ஆவார்கள்.

கலைவாணர் நாடகத் துறையிலே நீண்டகாலம் அனுபவம் பெற்றவர். யாராவது ஏதாவது நாடகம் நடத்துகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள்! முதலில் அவர்களுக்குக் கலைவாணரின் நினைவுதான் வரும். அவர் வந்து பார்த்துவிட்டால் போதும்! அதுவே திருப்தி என்று சொல்லிவிடுவார்கள். நாடகங்களுக்குக் கலைவாணர் தலைமை தாங்குவதும் உண்டு. அந்நாடகங்களைப் பற்றிய விமர்சனத்தை உள்ளது உள்ளபடியே சொல்லிவிடுவார். குற்றம் குறைகளை மறைத்துவிடமாட்டார். அதன் காரணமாக, பல நடிகர்கள் தங்களது தவறான நடிப்பைத் திருத்தி யமைத்துக் கொண்டு, மேன்மை யடைந்திருக்கிறார்கள்.

கலைவாணர் ஒரு நூலகம் வைத்திருக்கிறார். அதில் அறிஞர்களின் நூல்கள்தாம் இடம் பெற்றிருக்கும்! கலைவாணரே ஒரு நூலகமாக விளங்கினார்!

மனிதர்களிலே மாணிக்கங்களைப் பொறுக்கி எடுத்து விடலாம். ஆனால் மனிதரிலே மனிதரைக் காண்பது அரிது. அதிலும் பண்பும் அன்பும் இரக்கமும் ஈகையும் கொண்ட மனிதரை கலைவாணரின் மறைவுக்குப்பின் எங்கேபோய்க் காண்பது?

கலைவாணரிடம் உள்ள சில அரிய குணங்கள் சாதாரணமாக எல்லோரிடமும் காணமுடியாது. ஒருவன் செய்த தீமைகளை மறந்துவிடுவார்! அவனுக்கு மேலும் நன்மைகளைப் புரியும் பரந்த உள்ளம் கலைவாணர் ஒருவருக்குத்தான் உண்டு. மன்னிப்போம், மறப்போம் என்று அறிஞர் அண்ணா அவர்கள் சொன்னதற்கு இலக்கணமாக விளங்கினார் கலைவாணர். உள்ளத்தில் எவ்வளவுதான் கவலைகள் இருந்தாலும் சரி, தன்னைச் சுற்றி ஓயாத தொல்லைகள் இருந்தாலும் சரி அதைப் பொருட் படுத்தாமல், தானும் மகிழ்ந்து, தன்னைச் சேர்ந்தவர்களையும் மகிழ வைத்துக் கவலைகளை மறக்கடிக்கச் செய்வதிலே அவர் மன்னன். வந்த விருந்தினருக்கு வயிறு வெடிக்க நகைச்சுவையும், விருந்தும் ஊட்டும் பண்பு மிகுந்தவர் அவர். அவரது நகைச்சுவையைக் கேட்டுச் சிரித்துச் சிரித்து வயிறு வலி கண்டவன் நான்! அதற்கு வைத்தியம் சொல்லிய அகஸ்தியர் அவர்.

சுறுசுறுப்பு இல்லாமல் மந்தமாக நிகழ்ச்சிகள் நடைபெறுவரும் விழாக்களில் கலைவாணர் நுழைந்தால், விழா சுறுசுறுப்பின் உச்ச எல்லைக்கே சென்றுவிடுவது இயல்பு. எவ்வளவு சாதாரணமான விழாவானாலும் சரி, அவர் வந்துவிட்டால் நிறைந்துவிடும் என்ற எண்ணத்தை உண்டாக்கி வைத்த அந்த உயர்ந்த மனிதர் இன்று நம்மையெல்லாம் விட்டு மறைந்துவிட்டார்.

கலைவாணரின் விருப்பங்கள் பல. அவருடைய ஓய்வு காலத்தைக் காவேரிக் கரையில் ஒரு தோப்பில் பர்ணசாலை அமைத்து அதில் கழிக்க எண்ணியிருந்தார். அவரைச் சுற்றிலும் புத்தகங்கள் இருக்க வேண்டுமாம்! எப்பொழுதும் கலைஞர்கள், பண்டிதர்கள், வித்வான்கள் சூழ்மியிருக்க வேண்டுமாம்! என்னே கலைவாணரின் ஆசை! ஐயோ! இதையெல்லாம் விட்டுவிட்டு எப்படிப் போக அவருக்கு மனம் வந்தது?

தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளர் என்பது கலைவாணர் ஒருவருக்குத்தான் தகும். தமிழ்நாட்டில் இப்படி ஒரு கலைஞன் இனித் தோன்றமாட்டார் என்பது கல்மேல் எழுத்து. வாரி வாரி வழங்கிய வள்ளல் தன் வாரிசுகளுக்கு 'கலைவாணரின் புதல்வர்கள்' என்ற ஒரு புகழை மட்டுமே அளித்துப் போயிருக்கிறார். கதிகலங்கி நிற்கும் அவர்களுக்கு கலைஞர்கள்தான் ஆதரவு தர வேண்டும்.

**என். எஸ். ராமதாசன்**



அரசியல் தலைவர்களும் அதிசயிக்கும் பேச்சு.

## இது மனக் கணக்கு!

கலைவாணர் அவர்கள் என்றுமே பணத்திற்கு முக்கியத்துவம் கொடுத்ததில்லை. தனக்குக் கிடைத்த வாய்ப்புகளால் குவியும் செல்வத்தை, சமுதாயத்தின் அடித்தளத்தில் முடங்கிக் கிடக்கும் ஏழை எளியவர்களுக்கே அள்ளித்தரும் குணம்பெற்றவர்.

கலைவாணர் அவர்கள் பெரும் பெரும் தொகையாக நன்கொடை தந்தது, மொத்தம் பத்து லட்சத்து எழுபத்தையாயிரம்!

இலவசமாக நடத்திக் கொடுத்த நாடகங்கள் 1800!
இது மனக் கணக்கு!

அடுத்த இதழில்
'நான் எழுத்தாளன் ஆனேன்'
வரும்.

# கலைவாணர் புதைபொருள்!

## தேர்தல்!

கலைவாணர் சினிமாப் பேச்சில் மட்டுமல்ல, மேடைப் பேச்சிலும் சிறந்தவர் என்பதைப் பல நிகழ்ச்சிகள் நிரூபித்திருக்கின்றன. மேடையில் தெளிவாகவும் தெம்பாகவும் அவர் பேசி வந்திருக்கிறார். அவரது கருத்துக் குவியல்கள் ஏராளம். மேடைப் பேச்சை அவர் வெகு லாவகமாகக் கையாண்டு வந்தார். தனது வாதத்தைத் தக்க முறையிலே,-யாரும் மறுப்புச் சொல்ல முடியாத வகையிலே சொல்வதில் அவர் வல்லவர். அதிலும், தேர்தல் காலங்களிலே, அவர் பேசும் தேர்தல் பேச்சுக்கள் கருத்து நிறைந்தனவாகவும், எதிரிகளை மட்டம் தட்டுவனவாகவும் அமைந்திருந்தன. கடந்த பொதுத் தேர்தலில் கலைவாணர் நமது இயக்கத் தோழர்களை ஆதரித்துப் பல இடங்களில் பேசினார். குறிப்பாக, அவர் காஞ்சீபுரம் தொகுதியில், அறிஞர் அண்ணா அவர்களை ஆதரித்துப் பேசிய பேச்சு மறக்க முடியாத ஒன்று. அந்தப் பேச்சு கலைவாணரின் சொல்லாற்றலையும், பேசும் பான்மையையும் நன்கு எடுத்துக்காட்டுகிறது.

காஞ்சிபுரம் தொகுதியிலே அறிஞர் அண்ணாவை எதிர்த்து நின்ற அபேட்சகர் சீனிவாசன்,



ஒரு டாக்டர். அந்த டாக்டரைப் பற்றிக் கலைவாணர் பேசிய கருத்தை, அந்த டாக்டர் கூட ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். கலைவாணர் பேசிய அந்தப் பேச்சு இது:

“காஞ்சிபுரம் மக்களே! ஒரு விஷயம்! இங்கே காங்கிரசின் சார்பில் டாக்டர் சீனிவாசன் தேர்தலுக்கு நிற்கிறார். அவர் சிறந்த டாக்டர். ‘கை ராசிக்காரர்’ என்று கூடச் சிலர் சொல்லுகிறார்கள். அவர் நோயாளிகளைக் கண்ணுங் கருத்துமாகக் கவனிப்பதாகச் சொல்கிறார்கள். அப்படிப்பட்ட நல்ல டாக்டர்கள் உங்களிடமே இருக்கவேண்டும். அவரை சட்டசபைக்குப் போகச் சொல்லி, அதன் மூலம் வெளியூருக்கு அனுப்பினால், ஒரு நல்ல டாக்டரை நீங்கள் இழந்து விடுகிறீர்கள். சட்டசபை நிகழ்ச்சிகள் சேர்ந்தாற்போல் ஒரு மாதகாலம் கூட நடப்பதுண்டு. அந்தச் சமயத்தில், நல்ல டாக்டர் அங்கே போய் உட்கார்ந்து கொண்டால், உங்கள் நிலைமை என்ன ஆகும்! இதை எண்ணியாவது தயவு செய்து, டாக்டரை வெளியூருக்கு அனுப்பி விடாதீர்கள். அதனால், அரசியலுக்கே வாழ்வை அர்ப்பணித்து விட்ட அறிஞர் அண்ணா அவர்களுக்கே உங்கள் வாக்குகளைப் போடுங்கள்.”

காங்கிரஸ் கட்சிக் காரரைத் தாக்காமல், அவரது சேவையைச் சொல்லியே, தி. மு. கழகத்துக்கு ஓட் கேட்ட கலைவாணரின் திறமையே திறமை! அந்தத் திறமை நடிகருலகில் எவருக்கும் வராது.

இன்னும் பல இடங்களில் கலைவாணர் அவர்கள், காங்கிரஸ் எம். எல். ஏக்களைப் பற்றிய சரியான விளக்கத்தைத் தக்க முறையிலே தந்தார்கள்.

“காங்கிரஸ் எம். எல். ஏக்கள் சட்டசபையில் பலமுறை வாய் திறந்திருக்கிறார்கள். அது எப்போது! எப்போதெல்லாம் கொட்டாவி வருமோ அப்போதெல்லாம் அவர்கள் வாய்திறந்திருக்கிறார்கள், அவ்வளவு தான்!”

“காங்கிரஸ் எம். எல். ஏக்கள் எப்போதாவது சட்ட சபையில் எழுந்திருக்கிறார்களா என்றால், உண்டு! அவர்கள் பல முறை எழுந்திருக்கிறார்கள். மூட்டைப் பூச்சி கடிக்கும் போதெல்லாம், எழுந்திருப்பதுதான் அவர்கள் வேலை”

அந்த மேதையிடமிருந்து வந்த இதுபோன்ற அரிய பேச்சுக்கள் ஏராளம்! ஏராளம்!

★

## நாடகத்தில் நற்கருத்து

கலைவாணர் விலாங்கு மனிதன் என்ற ஒரு நாடகம் நடத்துவார். அதில் ஒரு நிகழ்ச்சி! அவருக்கும் அவரது மனைவிக்கும் வாய்ச் சண்டை வருகிறது. மனைவி, ஓய்வே இல்லாமல் தொடர்ந்து கணவரைத் திட்டிக் கொண்டே இருக்கிறாள். அவர் அதைக் கேட்டுக் கொண்டு வாளாவிருக்கிறார். அவரது



மௌனத்தைக் கண்ட வேலையாளுக்கு அதிசயம் ஏற்பட்டு விட்டது. தனது எஜமானரைப் பார்த்து, “எஜமான், அம்மா பாட்டுக்குப் பேசிக்கிட்டே போறாங்க! நீங்க சும்மாவே இருக்கீங்களே!” என்று கேட்கிறான். உடனே, அவர் “ஆமடா! வாழ்க்கையிலே ஒரு சக்திதான் பேசும்; இன்னொன்று சும்மா இருக்கும். இப்ப, ரயில் ஓடுது; தண்டவாளமும் ஓடினா, கதி என்ன ஆகுறது? அப்ப, ரயில் நிக்கணும்! தண்டவாளம் ஓடணும்! விஞ்ஞானிகள், அணுவை சிதைச்சுப் பார்த்தபோதுகூட, ஒரு அணு சுத்திவருதாம், ஒரு அணு நிக்குதாம்! அதுனாலே வாழ்க்கையிலே அவள் பேசுகிறாள்; நான் பேசாமல் இருக்கேன்! இவ்வளவுதான்!” என்று பதில் தருகிறார்.

மணமகள் நாடகம் நடைபெறும்போது கலைவாணர் அதிலுள்ள பாகவதரின் தோழனாக நடிப்பார். (திரைப்படத்தில் அப்படியல்ல) பாகவதர், ஒரு பெண்ணை மயக்குவதற்குத் தன் தோழனிடம் யோசனை கேட்பார். தோழன் யோசனை சொல்லப் போவான். அப்போது அவனுக்கு அருகில் காந்தியார் சிலை இருக்கும். அந்தச் சிலையைப் பார்த்தவுடனே, தோழனுக்கு தவறான யோசனை படுவதில்லை. உடனே அந்தச் சிலையைத் துணியால் மூடிவிட்டு யோசனை சொல்ல ஆரம்பிப்பான். தலையைச்சொரிவான்; உடம்பை அலட்டிப் பார்ப்பான்! ஊம்! பயனே கிடைக்காது! கடைசியாக, காந்தியாரின் உருவச் சிலையை அங்கிருந்து எடுத்து, வெளியே கொண்டு போய் வைத்து விட்டு உள்ளே வருவான்; அதன் பின்பு தவறான யோசனை தகுந்த முறையிலே அவனுக்குத் தோன்றும். காந்தியார் போன்ற உத்தமர்களுடைய உருவச் சிலை கூட எதிரில் இருந்தாலும் தவறான யோசனை வருவதில்லை என்று சொல்லி, அதே நேரத்திலே, பல காங்கிரஸ்காரர்கள் காந்திபேரைச்சொல்லி, அவரது சிலையை வைத்தே எத்தனை தவறுகள், அநியாயங்கள் செய்கிறார்கள் என்பதையும், அவர்களெல்லாம் மனிதர்களல்ல என்பதையும் சொல்லாமல் சொல்லி, தெளிவாக விளங்க வைக்கும் திறமையைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

★

## கிந்தனார்!

“நான் ‘கிந்தனார்’ கதா காலட்சேபம் நடத்துவதைப் பார்த்துச் சிலர் என்னைத் தவறாக நினைக்கிறார்கள். “என். எஸ். கிருஷ்ணன் எப்போதுமே இப்படித்தான்! யாரையாவது கிண்டல் செய்வது அவர்வழக்கம். இப்போது நந்தனாரை, கிந்தனாராக மாற்றியிருக்கிறார்” என்று பலர் அபிப்பிராயப் படுகிறார்கள். அது தவறு. நந்தன் பக்தியின் மூலம் முக்தி யடைந்தான்; கிந்தன் கல்வியின் மூலம் மேன்மை யடைந்தான்; அவ்வளவுதான்! அப்படியே பார்த்தாலும் ‘கிந்தன்’ என்ற வார்த்தையை நான் சொல்லவில்லை. எனக்கு முன்பே இந்த வார்த்தையை ஒருவர் சொல்லியிருக்கிறார்.



கோபாலகிருஷ்ண பாரதியார் நந்தனார் கீர்த்தனைகளை எழுதி வந்தார். ஒரு நாள் அவர் உணவு கூட உண்ணாமல் எழுதுவதிலேயே மும்முரமாகஈடுபட்டிருந்தார். அதைக் கண்ட அவரது தாயார், “என்னப்பா எழுதுகிறாய், சாப்பிடாமல் கூட” என்று கேட்டார்கள். அவர் “நந்தனார் கீர்த்தனைகள் எழுதிக் கொண்டிருக்கிறேன் அம்மா” என்று சொன்னார். அதைக் கேட்டவுடன் அந்த அம்மாள், “நந்தனாரோ, கிந்தனாரோ! அதெல்லாம் அப்புறம் எழுதலாம்! முதல்லே சாப்பிட வாப்பா” என்று சொல்லி அழைத்தார்கள். கிந்தனார் என்கிற வார்த்தையை முதலிலே சொன்னது கோபாலகிருஷ்ண பாரதியாரின் அம்மாதான். நான் இல்லை! தவறான கருத்துடையவர்கள் இதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும்” என்று கிந்தனார் காலட்சேபத்தில் தந்த விளக்கத்தை யாரும் மறக்க முடியாது, ★

## வெள்ளிக்கிழமை!

இரண்டாண்டுகளுக்கு முன்பு இந்திய அரசியலாருக்கு வேண்டுகோள் விடுக்கும் வகையில் கலைவாணர் என். எஸ். கே. ஒரு கருத்தை வெளியிட்டார்கள்.

“இயேசு அவர்கள் வெள்ளிக்கிழமைதான் இறந்தார்கள். உலக உத்தமர் காந்தியார் அவர்களும் வெள்ளிக்கிழமைதான் இறந்தார்கள். அமெரிக்க நாட்டுத் தலைவர் ஆப்ரகாம் லிங்கனும் வெள்ளிக்கிழமைதான் சுட்டுக் கொல்லப்பட்டார். ஆகவே, நமது சர்க்கார், இப்போது நடைமுறையில் இருந்து வரும் சர்க்கார் விடுமுறை நாளை, ஞாயிற்றுக்கிழமையிலிருந்து வெள்ளிக்கிழமைக்கு மாற்ற வேண்டும்” என்பதே நமது கலைவாணர் அவர்களின் வேண்டுகோள்.

இந்த நல்லெண்ணத்தைத் தெரிவித்த அதே கலைவாணர் அவர்கள் இறந்ததும் வெள்ளிக்கிழமை தான்!



# கற்பனை மாளிகை!

— தமிழ்ப்பித்தன் —



தென்னகத் திரை வானத்தில் நகைச்சுவைப் பகுதியை இன்றியமையாததாகவும், பொருள் உள்ளதாகவும் ஆக்கிய பெருமை கலைவாணர் என். எஸ். கே. அவர்களையே சாரும். அதிலும் புதுமை நிறைந்த கருத்துக்களைத் திரைப்படத்திலே தவழவிட்டு மக்கள் உள்ளத்தில் உள்ள மாசினை நீக்கிய பெருந்தொண்டுக்குப் பொறுப்பாளி கலைவாணர்தான். சிறந்த மருத்துவர்கள், சிறு குழந்தைகளுக்கு ஊசி போடும்போது சிரிப்புக் காட்டி, அவை மறந்திருக்கும்போது மெதுவாக ஊசியைச் செலுத்திவிடுவது போல, மக்களைச் சிரிக்கவைத்து, அதே நேரத்திலே சீர்திருத்தம் என்னும் ஊசி மருந்தை மக்கள் உள்ளங்களிலே ஏற்றிவந்தார். ஆரம்ப நாட்களில் தமிழகத்தில் புராணப் படங்களே அதிகமாகத் தயார் செய்யப்பட்டு வந்தன. அத்தகைய புராணப் படத்திலும் கலைவாணர் சீர்திருத்தக் கொள்கையைச் சொல்லிவந்தார். மக்களிடையே மண்டியுள்ள அறியாமையைச் சுட்டிக் காட்டிவந்தார்.

**பிரபாவதி** என்ற புராணப் படத்தைத் தமிழ்மக்கள் மறந்திருக்கமாட்டார்கள் என்று கருதுகிறேன். அந்தப் படத்தில் கலைவாணர் பூலோக வாசியாக நடிக்கிறார். அவரைப் பாதாள லோகத்தில் உள்ளவர்கள் நரபலியிடுவதற்காக அழைத்துச்செல்லுகிறார்கள். முப்பத்திரண்டு லட்சணம் பொருந்தியவர்தான் வேண்டும் என்று அசுரர் தலைவன் சொல்லிவிட, கலைவாணர், நரபலியிலிருந்து தப்பிவிடுகிறார். ஆனால், அவர் அந்த லோகத்து அதிசயத்தை வெளியே சொல்லிவிடுவார் என்று கருதி, அவரை, பூலோகத்துக்கு அனுப்பாமல் அங்கேயே வைத்துக்கொள்கிறார்கள். அந்த லோகத்திலே, அவர் ஒரு ‘நாராயண’ பக்தராக வாழ்கிறார். அங்குள்ள அசுரர்கள் அவரைத் திட்டுகிறார்கள். இறுதியில் அங்குள்ள அசுரர்களுக்கு ‘விஷ்ணுவின் அவதார மகிமையைத்’ தினமும் சொல்லிவருகிறார். அப்படிச் சொல்லிவரும்போது, ஒருநாள் ஒரு அசுரனின் தலையிலே காலால் மிதிக்கிறார். உடனே அந்த அசுரன் கோபம் கொள்கிறான். “ஏண்டா என்னை மிதித்தாய்?” என்று ஆத்திரத்துடன் கேட்கிறான். உடனே, அவர், “இப்படித்தான் பகவான் வாமனவதாரத்திலே, மகாபலிச் சக்கரவர்த்தியின் தலைமீது மிதித்தார்” என்று விளக்கம் சொல்கிறார். அதைக் கேட்ட அசுரன், “பகவானா? அப்பச் சரி, நல்லா மிதி” என்று தன் தலைமீது மீண்டும் மிதிக்கச் சொல்கிறான்.

இந்த நிகழ்ச்சி மூலமாக, கடவுள் பேரைச் சொன்னால் மடமை உடையவர்கள் எதை வேண்டுமானாலும் செய்ய ஒப்புகிறார்கள் என்பதை, மறைமுகமாகக் கண்டித்த கலைவாணரைப் பாராட்டத்தான் வேண்டும்.

**திருநீலகண்டர்** என்னும் புராணப் படத்தில்,

“காமன்கதை பாடவந்த
ஆரம்பத்தில்
நாமகள்என் றொருபெண்ணைத்
துதிப்பதென்ன?
நாவில்அவள் குடியிருப்பாள்
என்பதென்ன?
நாலுபேர் அறியஅதைக்
கூறுமாதோ!

“கல்விக் கரசி
என்றொரு பெண்ணைக்
கைதொழு திரேஅந்த
மங்கை! மங்கை!
மறையவன் நாவில்அவள்
உறைவது நிஜமானால்
மலஜலம் கழிப்பது
எங்கே? எங்கே?”

—என்று அவர் கேட்ட கேள்விக்கு இன்றுவரை புராணீகர்கள் கூடப் பதில் சொல்லத் தெரியாமல் திணறுகிறார்கள்.

**மனோன்மணி** என்னும் படத்தில், தான் தேவலோகத்திலிருந்து பூலோகத்துக்கு வந்ததாகவும், ‘கிருஷ்ண பரமாத்மா’வின் தோழனாக அவர் இருந்ததாகவும் சொல்லி, ஒரு வயோதிகரை ஏமாற்றி வந்தார். அந்த வயோதிகர், இந்தத் ‘தேவலோகவாசிக்கு’ அவசர அவசரமாக பால் பழம் வாங்கப் புறப்பட்டார். திடீரென்று அவருக்கு பால் பழத்துக்குத் தேவ பாஷையில் என்ன சொல்லுவார்கள் என்ற சந்தேகம் வந்துவிட்டது. அதைத் தேவலோக வாசியிடம் கேட்டார். தேவலோக வாசி இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவில்லையாதலால், சிக்கலாக மாட்டிக்கொண்டார். ஆனாலும் சமாளித்துக்கொண்டு ‘வினதா, சுதா’ என்று சடாரென்று சொல்லிவிட்டார். பாவம், அந்த வயோதிகர்! இறுதியில், அந்த ‘தேவலோக வாசியின்’ குட்டை இன்னொருவர் வந்து வெளிப்படுத்தும்வரை நம்பியே ஏமாந்தார். சமூகத்திலே இது போன்ற ஏமாளிகள் நிறையப் பேர்கள் இருக்கிறார்கள் என்பதைக் கலைவாணர் மிகத் தெளிவாக விளக்கினார், அந்தப் படத்தின்மூலம், பதினைந்தாண்டுகளுக்கு முன்பாகவே!

**ரத்னகுமார்** என்ற திரைப் படம் தமிழ்ப்பட ரசிகர்களின் கவனத்தை விட்டுச் சென்றிருக்க நியாயமில்லை. அந்தப் படத்திலே கலைவாணர் ஒரு புதிய தத்துவத்தை வழங்கினார். மனிதன் எப்போது சூரியனைக் கும்பிட ஆரம்பித்தான என்பதற்கு அவர் சொல்லும் காரணங்களைச் சிறந்த தத்துவாசிரியர்கள்கூட மறுக்க முடியாது. “மனிதன் ஆதியிலே மலைக் குகைக்குள்ளும், மரப் பொந்துகளுக்குள்ளும் வசித்து வந்தான். இரவு நேரத்திலே அவன் இருளின் கொடுமையிலே பயந்துபோனான். எனவே காலையில் சூரியன் புறப்பட்டு, வெளிச்சம் ஏற்பட்டவுடன் அந்த வெளிச்சத்தையும் அதைக் கொடுத்த சூரியனையும் வணங்கினான். இப்படி ஆரம்பித்த மனிதன் இன்னும் சூரியனை வணங்கிக் கொண்டிருக்கிறான்.”

**கிருஷ்ணபக்தி** என்ற படத்தில், சமுதாயத்திலே இந்த நாட்களில் நிலவிவரும் ஒரு பழக்கத்தைத் துணிந்து கண்டித்தார். ஒரு சிறுமி; அவளுக்குத் தாய், தந்தை உண்டு. அந்தச் சிறுமிக்கு பெற்றோர் நாட்டியம் கற்றுக்கொடுக்கிறார்கள். நட்டுவனார் தினமும் வருகிறார். நாட்டியம் பதம் அத்தனையும் சொல்லித் தருகிறார். ஒரு நாள் நட்டுவனார், சிறுமியின் தந்தையிடம், சிறுமியின் நாட்டியத்தைப் பார்க்கும்படி வேண்டுகிறார். அவரும் ஒப்புக்கொள்ளுகிறார். நாட்டியம் ஆரம்பமாகிறது. பாட்டும் துவங்குகிறது. சிறுமியின் பாட்டைக் கேட்ட தந்தைக்குக் கோபம் பொத்துக்கொண்டு வருகிறது. நட்டுவனாரை அடிக்கிறார். காரணம் வேறொன்றுமில்லை. சிறுமி, “கனவில் கண்டேனே, கண்ணனைக் காதல் கொண்டேனே!” என்று பாடி, “முத்தமிட்டான்” என்றெல்லாம் பாடுகிறாள். “சிறுபிள்ளைக்கு இதுமாதிரியாடா பாட்டுச் சொல்லித் தருவார்கள்” என்று கேட்டுக்கொண்டே நட்டுவனாரைக் கலைவாணர் நன்றாக அடித்துவிடுகிறார். அந்தக் காட்சியைப் பார்த்து, பல நட்டுவனார்களே கலைவாணரின் கருத்தை ஆமோதித்திருக்கிறார்கள்.

**மணமகள்** என்ற படத்தை யாரும் மறந்திருக்க முடியாது. காரணம், கலைவாணர் அதிலே ஏற்றுள்ள ‘ஆசிரியர்’ பாத்திரத்தைப்போல இதுவரை தமிழ்ப்பட உலகிலே வேறெவரும் ஏற்றுத் திறமையாக நடித்ததில்லை. சிறுபிள்ளைகளிடம் என்னென்ன சொல்லலாம், என்னென்ன சொல்லக்கூடாது என்பதை அவர் அந்தப் படத்திலே விளக்கினார். ‘அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது’ என்று வகுப்பிலே ஒரு பையன் சொல்லுகிறான். அதை அப்படியே திருத்தச் சொல்லிவிட்டு, கலைவாணர், “மானிடராகப் பிறப்பது அரிதல்ல, பிறந்த பின்னும் மானிடராக வாழ்வது அரிது” என்று ஒரு திருத்தத்தைச் சேர்க்கிறார்.

‘தெய்வம் தொழாள் கொழுநற் றொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை’ என்ற குறளுக்கு அவர் தந்த புதிய விளக்கம் கண்டு தமிழ் ஆசிரியர்கள்கூட அதிசயப்பட்டதுண்டு. தெய்வத்தைத் தொழாமல், தன் கணவனைத் தொழுது எழக்கூடிய பெண்மணி, பெய்ய வேண்டிய பருவத்தில் பெய்கின்ற மழைக்குச் சமானம் என்று விளக்கினார். மழை பருவம் தவறிப் பெய்தாலும், பருவத்துக்கு முன்பே பெய்தாலும் பயன் கிடையாது. பெய்ய வேண்டிய சமயத்தில் மழை பெய்தால், அதன் பயனைச் சொல்ல வேண்டியதேயில்லை. கணவனைத் தொழுதெழும் பெண் அதுபோல்ஆவாள் என்று அவர் உரை கூறியதை மறுக்க முடியுமா? யார் யாரோ குறளுக்கு உரை எழுத ஆரம்பித்துவிட்ட இந்த நாட்களிலே; கலைவாணரிடம், குறளுக்கு உரை எழுதும் தகுதிகூட இருந்தது என்று சொன்னால் அது தவறாகாது.

“மார்க்ஸ் கொள்கையை மார்க்சிசம் என்பதுபோல வள்ளுவர் கொள்கையை வள்ளுவம் என்று அழைக்கலாம்” என்று கலைவாணர் சொன்னதை யார்தான் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்? வாழ்வாங்கு வாழ்ந்தவர் கலைவாணர். நாட்டுமக்களுக்குப் பகுத்தறிவுக் கருத்தைப் படங்களின் மூலமாகப் புகுத்திய முதல் நடிகர் அவர்! வளமான கற்பனை அந்த வள்ளலின் தனி உரிமை! வாழ்க அவர்தம் கற்பனை! ★



கலைவாணரும் திலீப்குமாரும்.

கலைவாணரைப் பற்றிய இந்த பேட்டிக் கட்டுரை 52ம் ஆண்டு பொன்னி பொங்கல் மலரில் தோழர் முருகு. சுப்ரமணியம் அவர்களால் எழுதப்பட்டது. கலைவாணர் அவர்கள் காந்தி பக்தராக இருந்ததால், காங்கிரஸ்காரர்கள் அவரைத் தங்களவராக எண்ணினார்கள். ரஷ்யா சென்று வந்ததனால், கம்யூனிஸ்டுக் கட்சிக்காரர்கள், அவரைத் தங்களவர் என்று சொல்லிக் கொண்டார்கள். ஆனால், கலைவாணர் மட்டும் 'நான் சுயமரியாதைக் கட்சி' என்று இந்த பேட்டியில் துணிச்சலாகச் சொன்னார். அவ்வாறு அவர் சொன்னது, அரசியல் வட்டாரத்திலே பெருத்த பரபரப்பை உண்டாக்கியது. [ஆ-ர்.]



ஒரு பக்கம் சுப்ரமணியம், மறுபக்கம் ராமமூர்த்தி.

# "நான் சுயமரியாதைக்கட்சி"

"இந்தத் தேர்தலில் யாருக்கு உங்கள் வாக்கை அளிக்கப் போகிறீர்கள்!"

"பெயரைக் கேட்கிறீர்களா?"

"இல்லை...குறிப்பாக."

"ரொம்ப எக்கச்சக்கமான கேள்வி. இந்தக் கேள்விக்கு நான் இப்பொழுது பதில் சொல்லமுடியாது; சொல்லக் கூடாது."

"தமிழ்நாட்டு அரசியல் கட்சிகளில் உங்களுக்குப் பிடித்தமான கட்சி எது?"

"இந்தக் கேள்விக்கும் நான் பதில் சொல்லக்கூடாது. இருக்தாலும் பரவாயில்லை. சந்தேகமில்லாமல் நான் ஆதரிப்பது, விரும்புவது சுயமரியாதைக்கட்சி தான்."

"காங்கிரஸ் கூட்டங்களுக்கும் தாங்கள் செல்வதாகத் தெரிகிறதே! விளக்கம் தருவீர்களா?"

"முரண்பாடுதான்! என்றாலும் என்னுடைய நடுநிலையை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். நான் ஒரு கட்சிக்கே ஆளாகிவிட்டால், மற்ற கட்சியிலுள்ளவர்கள் நான் சொல்வது என்னவென்றே கவனிக்கமாட்டார்கள்; யாரையும் நான் இழக்க விரும்பவில்லை. எனவேதான் எல்லாக் கட்சிகளின் கூட்டங்களிலும், மாநாடுகளிலும் கலந்துகொண்டு எனக்கு இட்ட பணியை மட்டும் திறைவேற்றி வருகிறேன். இத்தகைய போக்கிலேயே எல்லாத் தலைவர்களும் வரவேற்கிருர்கள். மற்றொன்று......எனக்கென்று தனிக் கொள்கை உண்டு. எந்தக் கட்சிக் கொள்கையும் எனக்குப் பூரணமாகப் பிடிப்பதில்லை."

"உங்கள் கொள்கை என்ன?"

"ஆதிமுதல் 'குடியரசு', பாவலர் நடத்திய 'தேசபந்து' இரண்டு பத்திரிகைகளையும் நான் படித்து வந்தேன். அப்போது நான் சிறுவன்; நாடகக் கம்பெனியில் வேலை. பக்தி மார்க்கத்திற்கும் நாஸ்திகத்திற்கும் உள்ள வேறுபாடுகளை நான் அப்போது நன்ருகத் தெரிந்துகொண்டேன். படித்து ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வந்தேன்."

"உங்கள் முடிவு என்ன?"

"சுயமரியாதைக் கொள்கை நம் நாட்டுக்குத் தேவை என்பது தான் அந்த முடிவு."

"அதே நேரம் 'காந்தி பக்தன்' என்றும் சொல்கிறீர்களே?..."

"ஆம். நான் காந்தி பக்தன் தான்! கடந்த 33 வருஷமாகக் கதர் கட்டுகிறேன். காந்தியாரின் தொண்டுகளை நான் மிகவும் போற்றுகிறேன். இந்தியாவைக் காப்பாற்றக் காந்தியமும், தமிழ் நாட்டைக் காக்கச் சுயமரியாதையும் வேண்டும். என் கதை ஒவ்வொன்றிலும் இதே அடிப்படை தான்! இந்தக் கொள்கையிலிருந்து நான் சிறிதும் மாறவில்லை. அன்றுமுதல் இன்று வரை அதே கொள்கைதான்"

பேட்டியின் இடையிலே, மதுரம் அம்மையாரும் அங்கே வந்து சேர்ந்தார்கள்.

"தங்களுக்கும் மதுரம் அம்மையாருக்கும் அபிப்பிராய பேதம் ஏற்படுவதுண்டா?"

"சென்ற பதினேழு ஆண்டுகளாக ஏற்படவில்லை; இனியும் ஏற்படாது. எப்படி? எங்களிடையே 'பொருள் ஊடாடல்' இல்லாததுதான் முக்கிய காரணம். சாதாரணமாக மனவேறுபாடு ஏற்படுவதற்குக் காரணம் பொருள்தான்! சினிமாத்துறையில் இவ்வளவு நாள் சேர்ந்து வாழ்ந்தவர்கள் யாருமே இல்லை, எங்களைத் தவிர. சார்லி சாப்ளின்கூட இதற்கு மாறுபட்டுவிட்டார். நான் குடும்பப் பொறுப்பு முழுவதையும் மதுரம் வசமே ஒப்படைத்துவிட்டேன்."

"தங்கள் ரஷ்யப்பயணம் பற்றி சுருக்கமான விளக்கம்."

"என் வாழ்நாளில் ரஷ்யா போய் வந்தது என் பாக்கியமென்றே சொல்லுவேன். காலேஜ் புரொபசருக்கும் ஆரம்பக்கல்வி பயிலும் மாணவனுக்கும் உள்ள வித்தியாசம்தான் நம் நாட்டிற்கும் ரஷ்யாவிற்கும் உள்ள வித்தியாசம். நாம் இன்னும் எவ்வளவோ முன்னேற வேண்டும்."

"தாங்கள் இதுவரை எத்தனை படங்களில் நடித்திருக்கிறீர்கள்?"

"92 படங்களில் நடித்திருக்கிறேன். 93-வது படம் 'அமரகவி' படப்பிடிப்பு நடக்கிறது."

"தாங்கள் நடித்த முதல் படம்...?"

"சதி லீலாவதி - முதல் படமென்றாலும் அந்தப் படத்திற்கும் என் சம்பந்தப்பட்டவரையில் கதை, டைரக்ஷன், சினேரியோ எல்லாம் சாட்சாத் நான்தான்."

"இதற்குக் காரணம் அனுபவமா?"

"இல்லை. அசாத்தியமான தைரியம். மற்றவர்களெல்லாம் மைக்கைக் கண்டால் மிரளுவார்கள். 'சவுண்டு எப்படிப் ப... வாகுமோ?'-'உரத்துப் பேசினால் என்ன?' இப்படி அடியெடுக்கும் போது ஆயிரம் சந்தேகப்பட்டு... கொண்டு நடிப்பார்கள். நான் த்னி-என் விருப்பப்படி சரியோ தவரே செயலில் காட்டிவி... வேன்."

"தங்கள் வெற்றிக்கு இ... மட்டும்தான் காரணமா?"

"இன்னும் எத்தனையோ காரணங்கள் உண்டு. எனக்கு... பேர் வேணும், புகழ் வேணும் பணம் வேணும் என்ற ஆசை இல்லை. பேர், புகழ், பணம் எல்லாம் சேர்ந்து வரவேண்டு மென்கிற பேராசையுமில்லை. தப்பிதம் செய்கிறேமோ என்ற அச்சமும் இல்லை. அதைச் செய்ய வேண்டும், இதைச் செய்ய வேண்டும் என்று ஒன்றும் செய்யாமல் மனக்கோட்டை கட்டு... வழக்கமுமில்லை. மேலும் இது வரை என்ன சாதித்திருக்கிறோம் என்று கணக்குப் பார்ப்பது மில்லை. உதாரணம் ஒன்று கேளுங்கள். மேட்டூர் அணைக் கட்டில் ஒருபுறத்தில் மேலே ஏறு வதற்கு உயரமான இரும்பு ஏணிப்படிகள் வரிசை வரிசையாக இருக்கின்றன. அதில் ஒரு வன் ஏறுகிறன் என்று வைத்துக் கொள்ளுங்கள். பாதிவரை ஏறி விட்டுத் திரும்பி "நாம் எவ்வளவு தூரம் வந்திருக்கிறோம்?" என்று அவன் கீழே பார்த்தால் கண்டிப்பாக அவனால் மேலே ஒரு படி கூட ஏறமுடியாது. இறங்க வேண்டியதுதான். இதுமாதிரி தான் வாழ்க்கையிலும்! என்ன நடந்தது என்று பார்க்க ஆரம் பித்துவிட்டால் ஒருக்காலும் முன் னேற முடியாது!"

"தாங்கள் எதுவரை படித் திருக்கிறீர்கள்?"

"ஐந்தாவது வகுப்பு வரையில் மலையாளம் படித்திருக்கிறேன். மேலும் படிக்கப் பணமில்லை; வழியுமில்லை. நிறுத்திவிட்டேன். கண்டது கற்கப் பண்டிதனுவான் என்பது என்னைப் பொறுத்த வரையில் நூற்றுக்கு நூறு உண்மை."

வட இந்தியர் நமக்கு முன்பே சினிமாப் படத் தயாரிப்பில் ஈடுபட்டிருக்கிருர்கள். நம்மைவிட நிறையப் படங்களையும் தயாரித்திருக்கிருர்கள்.



சில அம்சங்களில் அவர்கள் நம்மைக் காட்டிலும் எவ்வளவோ முன்னேறியிருக்கிருர்கள் என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டியதே. ஆனால், நகைச்சுவை நடிப்பு ஒன்றில் மட்டிலும் அவர்கள் தமிழ் நாட்டவருக்கு எவ்வளவோ பின்தங்கியே யிருக்கிருர்கள். இன்னும் ஒரு நூறு வருடங்கள் போனாலும்கூட அவர்கள் நம்மவர்களின் நகைச்சுவை வரம்பை எட்டிப் பிடிக்க முடியுமா என்பது சந்தேகம்தான். இத்தகைய தனி மதிப்பைத் தமிழ் நாட்டிற்குத் தேடிக் கொடுத்த பெருமையில் பெரும் பங்கு என். எஸ். கிருஷ்ணனைச் சேரும்.

—குண்டுசி கோபால்.



— 4ம் பக்கத் தொடர்ச்சி —

பிரசாரங்கள், கலைப் பிரசாரங்கள் மனிதப் பண்பாட்டுப் பிரசாரங்கள், தமிழினப் பிரசாரங்கள் அவை. கலை பிரசாரம் செய்யக் கூடாது என்று கூறுபவர் அவற்றைக் கண்டு பிரமிக்க வேண்டியவர்ளாவர். ஏனெனில், அவர் பிரசாரக் கலை, கலைக்கே கலைப்பண்பு கூட்டுவதாயிருந்தது.

'நகைச்சுவை நடிகன்'—தமிழகத்தில் இந்தப் புதிய தொடரையும் அதற்குரிய புதிய மதிப்பையும் மரபையும் ஒருங்கே புத்தம்புதிதாகப் படைத்துருவாக்கிய படைப்புக் கலைஞன் என். எஸ். கே. தான். அவருக்குமுன் கோமாளிகள் இருந்தனர், கூத்தாடிகள் இருந்தனர், விதூஷகர், விகடர் கூட இருந்தனர். நகைச்சுவை தமிழகத்திலும் சரி, உலகிலும் சரி, இதற்குமேல் உயரவில்லை. ஆனால் உணர்ச்சி மிக்க காட்சிகளுக்கிடையே உணர்ச்சி தளர்த்தவும், காட்சி சோடனைகளுக்கிடையே பொதுமக்கள் பொழுதுபோக்கவும் மட்டுமே பயன்பட்டு அந்த நகைச்சுவைத் துறையை ஒரு நடிப்புத் துறையாக்கியவர் அவரே. அத்துறை நடிகருக்குப் பிற நடிகருக்கொத்த மதிப்பும், தேடித்தந்தவர் அவர்.

அவர் நகைச்சுவை சிலேடையிலும் சொல்லடுக்கிலும் மின்னுபவை அல்ல. அவை சொல்லிலும் சொல்படிந்து செயலிலும் செய்பவர் பண்புருவிலும் சமுதாயப் போக்கிலும் தோய்ந்தவை. அவை கதையோடு கதையாக நின்று, வாழ்க்கை பற்றிய ஆழ்ந்த சித்தாந்தங்கள்மீது ஒளிவீசி, படம் பார்ப்பவரை வாழ்க்கைச் சிந்தனையாளர்களாக்குபவை. மற்ற நகைச்சுவை நடிகர் நடிப்புப்போல அவர் நடிப்புத் திரையுடன் அவரது நாட்டில் படிந்துவிட்டதன் காரணம் இதுவே.

'கிந்தனார்' அவர் பழைய 'காலட்சேபங்'களுக்குத் தந்த புதுத்துறை. வேறு எதுவும் செய்யாமல் இது ஒன்று செய்திருந்தாலே அது அவர் புகழுக்குப் போதியது.

மதுவிலக்கு, புத்தர், திருவள்ளுவர், சுதந்தரம், ஐம்பது-அறுபது—அரசியலார் பேரவைக் கலைஞன் என்ற பெயரும், படியும் இல்லாமலே இத் தனிப்படைப்புக்களால் அரசியலார் நற்பணிகளுக்கு உதவின என். எஸ். கே.யின் பல தனிப் படைப்புக்கள்.

அவர் நகைச்சுவையில் சமுதாயப் பின்னணியும், சிலசமயம் எதிர் பாராச் சமுதாயக் கருத்துரைகளும் உண்டு. அவர் கையில் வசை கூட இசையும் இனிமையும் உடையன. அவர் மதுவிலக்கு பிரசார ஆர்வத்தால் தமிழகத்தின் மது விலக்கை இந்திரலோகத்துக்குக் கொண்டுசெல்ல விரைகிருர்.

தமிழர் விலக்கிய மதுவைத் தமிழர் வணங்கும் தெய்வங்கள் இன்றும் மேற்கொள்ளும்படி விடக் கூடாது என்ற கருத்து இதில் தொனிக்கிறது. இதுவும் கிந்தனார்ப் பகுதிகளும் மதவாதிகளையும் வைதிகப் பக்தர்களையும் புண்படுத்தத் தக்கவையேயாயினும், அவர் சாதுரியமும் நகைச் சுவையும் வசைக்குள்ளே ததும்பும் மனிதப் பற்றார்வமும் அவர்களைக்கூடத் தம்மை மறந்து அவர் கலையில் அடிக்கடி சொக்கவைத்து விடுகிறது என்பது மறக்க முடியாதது.

என். எஸ். கே.யின் கலைப் புகழ் பெரிது. ஆனால் அவர் சமுதாய சேவை, மனித சேவை ஆகியவற்றை நோக்க, அவை இன்னும் மிகப் பெரியது என்பதற்குத் தடையில்லை. அவர் கலைஞன் மட்டுமல்ல, கலைவள்ளல், கொடை வள்ளலாகத் திகழ்ந்தார். அவர் இறக்கும்போது குடும்பத்திற்குச் சொத்து எதுவுமில்லை. ஆனால் அவர் செய்த அறச் செல்வம் மட்டும் பத்து லட்சம் என்று கணக்கிடப்பட்டுள்ளது. கணக்கில்சேராத அறச் செலவு இதனினும் பன்மடங்கானவை என்பதை அவர் வாழ்வில் ஒரு கணம் அவருடன் தொடர்புடையவராயிருக்கும் பேறு பெற்றவர்கூட உணர்வர். வலது கை ஈவதை இடது கை யறியாத செயல்கள் நிறைந்ததுதான் அவர் வாழ்க்கை—நம் வாழ்வில் கண்ட வள்ளுவனுக அவர் விளங்கினுர்.

வாழ்க அவர்புகழ், நீடுக அவர் பண்பு. ★



— 2-ம் பக்கத் தொடர்ச்சி —

வைத்தது என்ருல் அவரது பிரேத ஊர்வலம் தமிழ் இதயத்தைச் சும்மா விட்டிருக்குமா? புதுமலர் நறுமணம் வீச, பொன்னுடை மின்ன மவுண்ட் ரோடிலே கலைவாணர் பிரேதம் மிதந்துவந்த காட்சி எந்தக் காலத்திலும் யாராலும் மறக்க முடியாததாகும். சென்னை நகரிலுள்ள அத்தனை போலீசும் பாதுகாப்புக்கு வந்திருந்தன. இருமருங்கும் குதிரைப் படை! முன்னும் பின்னும் ஏராளமான காமிராக்கள்! ஊர்வலத்தில் அண்ணா, நெடுஞ்செழியன், என் வி. நடராசன், கருணாநிதி, கண்ணதாசன், எம். ஜி. ராமச்சந்திரன், கே. ஆர். ராமசாமி, மற்றும் லட்சோப லட்ச கழகத் தோழர்கள், கலந்து கொண்டார்கள். ஊர்வலத்தில் கலந்துகொள்ளாத தமிழ் நடிகர்களே இல்லை.

கலைவாணர் பிரேதம் சரியாக 11-30 மணிக்கு மைலாப்பூர் இடுகாட்டை அடைந்தது. பிரேதத்திற்கு முன்னே போய் ஐம்பதாயிரத்துக்கு மேற்பட்ட மக்கள் அங்கே குழுமியிருந்தார்கள். நடிகர் நாகையா அவர்களின் தலைமையில் அறிஞர் அண்ணா, நெடுஞ்செழியன், கருணாநிதி, கண்ணதாசன், எம். ஜி. ஆர்., டி. வி. நாராயணசாமி மற்றும் பலர் கலைவாணரின் அறிவுத் திறன்பற்றி எடுத்துரைத்தார்கள். கனி மரம் சாய்ந்தது என்று அண்ணா குறிப்பிட்டார். அவரது தொனியிலே கண்ணீர் கலந்திருந்தது.

எம். ஜி. ஆர். அவர்களால் பேசவே முடியவில்லை. "அண்ணன் போய்விட்டார்! இந்தத் துக்கம் எப்பொழுது போகுமோ! நான் செத்தால்தான் போகும்" என்ருர். இதற்குமேல் அவரால் பேசமுடியவில்லை. நடிகர் தங்கவேலு அடிபட்ட குழந்தையைப்போல் அழுதார். "எனக்கு என் அண்ணன் அடிக்கடி கூறி வந்தது, "பணத்தைப் பெரிதாக மதிக்காதே" என்பதுதான் என்ருர் தங்கவேலு. தியாகராஜ பாகவதர் சோகமே உருவாக இருந்தார். ஆனால் அத்தனை பேருமே ஒருமுகமாகச் சொன்னுர்கள்: "ஒரு கலைவாணர் மட்டும் சாகவில்லை; ஒரு இசையமைப்பாளர் இறந்தார்; ஒரு டைரக்டர் இறந்தார்; ஒரு பேச்சாளர் இறந்தார்; ஒரு சிறந்த நடிகர் இறந்தார்; ஒரு அமைதிப் பிரியர் இறந்தார்; ஒரு அரசியல் ஸ்தானீகர் இறந்தார்" என்று.

நான்கு நாட்களாக கலையுலகு இருண்டு கிடக்கின்றது. முக்கியஸ்தர்களின் முகங்களிலே களை இல்லை. அன்னை நாடு அழுது புலம்புகிறது. அரும்பெரும் கலைஞனை இழந்த தமிழ் மக்கள் நினைத்து நினைத்து வருந்துகிருர்கள். ★



ஒரு மணவிழாவில்-கலைவாணர்



## ௨. பூச்சூடிப் போவாள் புறம்.

சட்ட சபைக்குள்ளே சங்கத் தமிழ்முரசம்
கொட்டுவதைக் கேள், நீ குறைசொல்வோர்-கெட்ட மிவர்
ஓச்சுபுகழ் மீள ஒளிபெற்ற தண்டமிழ்த்தாய்
பூச்சூடிப் போவாள் புறம்.

—ந. இராமதேவி, சென்னை 1.

✻

தன் கணவன் போனதன்பின் தண்மலரைச் சூடுதலை
வன்மையுடன் கண்டிப்பர் வஞ்சகர்கள்-மன்னுலகில்
பூச்சூட வொண்ணாத பூங்கொடியாள் நீத்ததன்பின்
பூச்சூடிப் போவாள் புறம்.

—திலகநாதன், மேலைச்சிவபுரி.

✻

ஊடல் மிகுதியால் உள்ளூடன்ற சுடுயிரும்
கூடல் குறிப்புணர்த்த வேண்டுமால்-தேடியவன்
பேச்சுக் கொருப்படுமுன் பேரழகாள் ஆர்வமுறப்
பூச்சூடிப் போவாள் புறம்.

—மலையன், கோட்டூர்.

✻

நனைவூறும் மைக்கண்ணாள்; கட்டழகுப் பெண்ணாள்;
சுனையூறும் இன்சொல்லாள்; காதல்-மனமுறப்
பேச்சுக் கிடமின்றிப் பேதை யெனை நீங்கிப்
பூச்சூடிப் போவாள் புறம்.

—மு. முத்துக்குமாரசுவாமி, திருப்பரங்குன்றம்.

✻

வானூர் திராவிடத்தின் வற்று வளய்யாவும்
கோனுரிமை பெற்றால் குணமாகும்-வினார்தம்
மூச்சடங்கப் போர்முனையில் வென்றால் புகழ்தமிழும்
பூச்சூடிப் போவாள் புறம்.

—ஆ. பெருமாள், சென்னை-11.

✻

எண்ணும் எழுத்தும் இலக்கணமும் முக்கூறும்
உன்னற் றமிழ்க்கிருந்தும் கைம்பெண்ணே-தென்னவனே!
ஓச்சும் உரிமையாம் ஓர்துணையால் வாழ்வென்னும்
பூச்சூடிப் போவாள் புறம்.

—ஆ. கோவிந்தராசன், கரந்தை.

✻

மொழிப்போரென் றுல்மகிழ்ந்து மோந்து 'மகனே
விழிப்புறு' பட்ட தடா வாழ்வோம்;-இழிமொழியின்
மூச்சடக்கு' என்றுரைத்து முன்னின்றே போர்நடத்தப்
பூச்சூடிப் போவாள் புறம்!

—மு. பலராமன், கரந்தூர்.

✻

வேங்கை விரட்டு வரும் வெஞ்சமரில் பங்கேற்றே
ஓங்குபுகழ் காண்பாள் உயர்தமிழ்ப்பெண்-தீங்குமிகு
வாய்விச்சுக் கொண்ட வடநாட்டுப் பெண்பயந்து
பூச்சூடிப் போவாள் புறம்.

—முத்துவளவன், கரந்தை.

✻

காட்சிலபோய் நான் சென்றால் நங்கையவள் நீர்துளிர்க்கும்
வாட்கண்ணால் தாக்கியெனை வாட்டிடுவாள்-நீட்குழலில்
பூச்சூட்டப் பூக்கொண்டு போயினும்நான் தான்பறித்துப்
பூச்சூடிப் போவாள் புறம்.

—கே. சண்முகசுந்தரர், சென்னை-17.

✻

உள்ளுணர்வு துள்ளும்; உடலோ நடுநடுங்கும்;
தெள்ளமுதத் தட்டுடனே தீஞ்சுவையாள்-மெள்ளவேதான்
பேச்சுத் திறனற்றுப் பெண்ணாய் முதலிரவில்
பூச்சூடிப் போவாள் புறம்.

—சு. கடலைமுத்து, ராமவர்மபுரம்.

✻

தாய்மொழியின் பேரால் தமிழ்நாடென் றுர்த்திடவே
பாய்தமிழர் போரதனில் பங்குபெறத்-தூய்தொண்டே
மூச்சென்னும் செல்வி தி.மு.க. நறுவஞ்சிப்
பூச்சூடிப் போவாள் புறம்.

—செல்வதாசன், சென்னை-1.

✻

கற்பும் கவிநயமும் காப்பியமும் கண்டதமிழ்ப்
பொற்பிலே இந்தி புகுவளேல்-பொற்பிழந்து
ஏச்சீ வெனத்தூற்றிச் சீறி யுமிழெச்சிற்
பூச்சூடிப் போவாள் புறம்.

—எ. பகவதி, கன்னியாகுமரி.

✻

கன்னக் கனிகொடுக்கும் காதலியைக் கூப்பிடநான்
சின்னக் குரல்கொடுத்தேன்; செவ்விதழாள்-என்மீது
சீச்சொரிவாள்; தன்கண்ணால் திண்டாட விட்டுவிட்டுப்
பூச்சூடிப் போவாள் புறம்.

—பா. இளங்கோ, கரந்தை.

✻

அன்னை உளங்கனிய, அக்காள் நலங்காணத்
தன்னை வலுப்படுத்து! தந்தைசொல்-நன்றுயக்கேள்!
சிச்சீச்சி தன்தாரம் உள்ளிருக்கப் போகலாமோ
பூச்சூடிப் போவாள் புறம்?

—ஜே. ஜெயராஜ், வரதராசபுரம்.

✻

ஆண்ட அரசென்ன? ஆய்ந்த தமிழென்ன?
பூண்ட சிலம்பென்ன? போர்தொடுத்த-நீண்ட உடல்
மூச்சிழக்க வில்லையென்று மூப்புத் தமிழரசி
பூச்சூடிப் போவாள் பறம்.

—குமார, நடராசவரதப்பன், ந. பாளையம்.

✻

எண்ண உளம்மகிழும் ஏதமில் நன்முகத்தால்
என்னுளத்தை ஈர்த்திட்டாள் ஏந்திழையாள்-என்னெதிரே
பேச்சொன்றும் பேசாள்;யான் பேசுங்கால் நாணமெனும்
பூச்சூடிப் போவாள் புறம்.

—ம. நிலவேந்தன், வாங்கல்.

✻

இந்திக்கு இங்கென் இடமா எனச்சினந்த
வல்திறலோன் போர்க்களத்தில் வீழ்ந்திட்டான்-நன்மனையாள்
ஏச்சிழந்தாள்; கீழ்விழுந்தாள்; மொய்குழலில் எவ்வாறு
பூச்சூடிப் போவாள் புறம?

—ஆ. பழநி, மேலைச்சிவபுரி.

✻

தென்றல்வே லாற்சிதைத்தாய் செந்தமிழா இந்தியினை!
இன்றோ உயிர்பெற் றெழுந்துளது!-வென்றிவாள்
ஓச்சி ஒழித்திடுவாய் உன்றமிழ்த்தாய் அன்பாகப்
பூச்சூடிப் போவாள் புறம்.

—சோ. பா. இளங்கண்ணன், அழகப்பா நகர்.

✻

அந்தி மயங்கும் அருங்காலை தன்மணமும்
உந்திவரு தென்றல் உறுமணமும்-முந்தியனள்
பாச்சூடி நின்ற தமிழ்மணமும் சூழ்ந்தனவே
பூச்சூடிப் போவாள் புறம்.

—கண்ணனார். சென்னை-1.

✻

பூவையவள் மேனியால் பூக்காட்டைத் தான்காட்ட,
மேவுமெழில் கண்டுமனம் மெய்யிழந்தேன்-பாவையுடை
வீச்சால்நான் வாட விரைவாகக் கூந்தலிலே
பூச்சூடிப் போவாள் புறம்.

—பா. பா. சோமநாதன், சென்னை-4.

✻

மென்பணைத்தோள் விம்மும்; விரிகுழற்கார் மேலலையும்
அம்பியற்கண் ஆடி அறிவழிக்கும்-மின்னொளியாள்
தீச்சுடராய் உள்ளம் சிதைக்கின்ற காதலெனும்
பூச்சூடிப் போவாள் புறம்.

—ஜெயா, உடுமலைப்பேட்டை.

✻

வாழ்வு நிலையன்று; வந்துசேர் தாழ்வுதனை
வீழ்த்துவதே வீரமென வேல்தொடுமுன்-சூள்உரைத்து
மூச்சோடு போருக்கே முந்தும் தமிழ்ப்பெண்ணாள்
பூச்சூடிப் போவாள் புறம்.

—எம். மாசிலாமணி, சென்னை-6.

ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் கண்ணதாசன், ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை-6. தமிழ்நாடு.

